# அருளோசை

திருவள்ளுவர்
ஆண்டு 2003
மார்கழி
1972 டிசம்பர்



ஆடல் வல்லான்

கணேசன

## தமிழ்நாடு தெய்விகப் பேரவை

சென்னை-18




### உருவாக்கும் பணி

பண்புடைய மக்களை உருவாக்குவதில் அருளோசையின் பணி சிறப்பானதாகும்,

—ஆர். சிவகாமி-தலைமையாசிரியை-சிவநாதபுரம்.

### அளவிலா ஆனந்தம்

தங்கள் "அருளோசை" கண்டு அளவிலா ஆனந்தம் அடைந்தேன்.

—ஆர். குஞ்சிதபாதம்பிள்ளை, கடக்கம்.

### அகிலமெலாம் பரவ

இந்து சமய இறை நெறியைத் தங்கள் இதழ் மூலம் அகிலமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்.

—சி. ஈசுவரன், செட்டிகுளம். (இவ்வன்பர் அருளோசைக்கு 8-சந்தா சேர்த்தனுப்பியுள்ளார். நன்றி—ஆசிரியர்)

### நீண்ட நாளைக்குப் பிறகு

சிவலிங்கத்தைப் பற்றிய தெளிவு இல்லாமல் நீண்ட நாட்களாக இருந்த எனக்கு, தங்கள் இதழ் மூலம் விளக்கம் கிடைத்தது.

—பொ. அண்ணாமலை-ஆசிரியர்-அம்மையார்குப்பம்

### நவில்தொறும்

தென்முகக் கடவுள் பற்றிய கட்டுரையினைப் பன்முறை படித்தேன்.

—சிவ. முருகன், பெருமாள்புரம்.

### நண்பரெலாம் வாங்குக

நம் சமயப் பெருமையெலாம் உணரவேண்டும். நண்பரெலாம் "அருளோசை" வாங்க வேண்டும்.

புலவர் மு. செல்வ அரசு, தாம்பரம்.

### இல்லறமும் துறவறமும்

"வாழ்க்கையென்ற மாளிகை" கட்டுரை இல்லறத்தாரும், துறவறத்தாரும் படித்து உணரும் படியாக அமைந்துள்ளது.

—ஜெ. ஞானமூர்த்தி, வேதாரண்யம்

### இணைப்பு

இறைமையைப் பரப்பும் நம் பேரவை, திருநெறிய தமிழையும் இணைத்துப் பரப்புவது சாலப் பொருந்தும்.

—கதிர்-சுப்பையன், குடந்தை.

### உலகமெலாம்

தங்கள் "அருளோசை" உலகமெலாம் பரவ ஆண்டவன் அருள் பாலிக்கட்டும்.

—ப. கிருஷ்ணவேணி, வேலூர்.

### திக்கெட்டும்

அருளோசையின் மணியோசை திக்கெட்டும் கேட்கட்டும்.

—சா. சொக்கலிங்கம், தேவங்குடி

### சிவாகம விதிகள்

தங்கள் இதழில் "சிவாகம விதிகள்" பற்றித் தொடர்ச்சியாக எழுத வேண்டுகிறேன்.

—வி. எம். சி. பி. செட்டியார்-வெள்ளாங்கோவில்.

### இளஞாயிறு

"அருளோசை"யின் தொண்டுகள் பெருகி "இளஞாயிறு" போல் ஒளிவீச இறைவனை வேண்டுகிறேன்.

—வெ. இராமாநுசம், ஆசிரியர், எடுத்தானூர்.






(திங்களிதழ்)

ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே.



| மணி 1 | பரிதாபி மார்கழி<br>1972 டிசம்பர் | ஓசை 6 |
|---|---|---|



அன்புடையீர், வணக்கம் !

அருளோசை இதழ் பள்ளி ஆசிரியர்கள் பலருக்கு மிகுந்த மன நிறைவை அளித்திருக்கிறது என்று கருதுகிறோம். காரணம் பெரும்பாலான பள்ளி ஆசிரியர்கள் தாங்களாகவே முன்வந்து "அருளோசை" சந்தாதாரராகியுள்ளனர். அவர்களுக்கு எம் நன்றி. அருளோசை இதழின் சந்தாதாரராகியுள்ள ஆசிரியப் பெருமக்கள் தங்கள் சகோதர ஆசிரியர்களுக்கு இதனை அறிமுகப் படுத்திவைக்க வேண்டுகிறோம். ஒரு ஆசிரியர் படித்தால் அவரிடம் படிக்கும் மாணவர்கள் அனைவரும் படித்ததற்கு ஒப்பாகும்.

மேலும் ஒரு அன்பான வேண்டுகோள். பல அன்பர்கள் பலவிதமான கட்டுரைகளை எழுதி அனுப்பி அவற்றை வெளியிடும்படி மீண்டும் மீண்டும் கடிதம் எழுதுகின்றனர். சிறந்தவைகளாக இருப்பினும், நாங்கள் கட்டுரைகள் வேண்டும் என்று கேட்டு எழுதி வாங்கிய கட்டுரைகளில் பல இன்னமும் பிரசுரிக்கப்படாமல் இருக்கின்றன. எனவே நாங்கள் கட்டுரைகள் வேண்டும் என்றுகேட்கும் வரை பொறுத்தருளக் கேட்டுக்கொள்கிறோம்.

பல அன்பர்கள் புதிதாகச் சந்தாதாரர்களாகச் சேருபவர்கள் உடனே இதழ் வேண்டும் என்று கோருகிறார்கள். அருளோசையின் அஞ்சல் சலுகைநாள் ஆங்கிலமாதம் 15-ம் தேதி. எனவே ஒவ்வொரு ஆங்கில மாதமும் 15-ம் தேதிக்குப் பிறகு சந்தாதாரர்களாகச் சேருபவர்களுக்கு அதற்கு அடுத்த மாத இதழிலிருந்து அனுப்பிவைக்கப் பெறும்.

பேரவை வெளியீடுகள் சம்பந்தமான கடிதங்களையும், சங்கங்கள் தொடர்பான கடிதங்களையும், அருளோசை பற்றிய கடிதங்களையும் தனித் தனித்தாளில் எழுதி ஒரே உறையில் வைத்து அனுப்பினால் தாமதமின்றி நடவடிக்கை எடுக்கத் துணையாக இருக்கும்.

அ நாராயணசுவாமி,
பதிப்பாசிரியர்.

## இந்த இதழில்

—:o:—



எதிர்பாராத காரணங்களால் தடைப்பட்டுள்ள "வள்ளுவர் வழியில்" தொடர் கட்டுரை அடுத்த இதழிலிருந்து தொடர்ந்து வெளிவரும்.

—ஆசிரியர்.

---



---

# "அருளோசை"

## வினா விடைப் பகுதி—நவம்பர்-72
## பரிசு பெற்றவர்கள்

முதல் பரிசு: திரு. கதிர்—சுப்பையன்—குடந்தை. சந்தா எண் 1301.

இரண்டாம் பரிசு: திரு. டாக்டர். சிங்கை மணிமாறன். இந்திய ராணுவம் சந்தா எண் 506.

மூன்றும் பரிசு: திரு. சோ. கிருஷ்ணமூர்த்தி, திருச்சி–2. சந்தா எண் 1025.

நான்காம் பரிசு: சி. ஞானம், உசிலம்பட்டி. சந்தா எண் 1312.

---




*நல்வாழ்த்துக்கள் !*

செல்வ, சென்ற கடிதத்தில் பொருள்கள் அழிகின்றன என்று எழுதியிருந்தோம். பொருள்கள் உண்மையில் அழிகின்றனவா ?-இல்லாமலே போகின்றனவா ? என்று ஆராய்ந்தால் உண்மையில் உலகத்தில் எந்தப் பொருளும் இல்லாமல் அழிந்துவிடுவதில்லை என்பது புலப்படும். சமணத் தத்துவ உலகில் ‘ அழிவு ’ என்று குறிக்கப்பெறுவது, நிலை மாறுதலேயாம். குப்பை, அழிகிறது,–உரமாகிறது. உரம், அழிகிறது,–மரம் வளருகிறது. இஃது உலகியலின் மாருத நியதி. சமணத் தத்துவத்தின்படி பொருள்கள் பலவற்றின் பகுதிகள் சேர்ந்த ஒரு பொருள் கூட்டுப் பொருளாகிறது. பின், அப்பகுதிகள் பிரிந்து தத்தம் பிரிவுகளில் போய்ச் சேர்ந்து விடுகின்றன. இதனையே சமணத் தத்துவம் ‘ அழிவு ’ என்று கூறுகிறது. இதே விதியைச் சமணர்கள் ஆக்கத்திற்கும் எடுத்துக்காட்டுகின்றனர். அதாவது, ஒன்றிலிருந்துதான் பிறிதொன்றை ஆக்கமுடியும். ஒன்றுமே இல்லாமல் வெரும் சூன்யத்தில் ஒன்றும் ஆக்க முடியாது. ஆனாலும், பகுதிகளாகிய நிலம், நீர் போன்றவற்றைப் பிரித்துக் கொண்டே போனால், இறுதி நிலையில் பிரிக்கமுடியாது—அதாவது பகுதிகளாலாகாத தனி நிலைத் தன்மையுடைய மூலப் பொருள்களை அடையலாம் என்று சமணம் கூறுகிறது. அந்த மூலப்பொருள்களே அணுக்கள் ! இந்த அணு நிலையே ‘ புற்கல ’த்தின் இரண்டாவது நிலை. இந்த மிகச்சிறிய அணுக்களிலிருந்துதான் உலகம் உற்பத்தியாகின்றது என்பது சமணர் கொள்கை.

அணு என்பது தனிநிலைப் பொருள்; மூலப்பொருள்; எந்த ஒரு பகுதிகளாலும் ஆகாதது. ஆதலால் அதற்கு, மேல்-கீழ்

என்ற பக்கங்கள் கிடையா; வடிவமும் இல்லை; ஆனாலும், வடிவங்களற்ற இந்த அணுவே, வடிவங்கள் தோன்றும் இடம். அணு, கண்ணுக்குப் புலப்படுவதல்ல. சாதாரணமக்கள் இப் பொருளை ஊகத்தால் உணரலாம்; அறியலாம். நிறை ஞானி கள் காணவுங் கூடும். சமணக் கொள்கைப்படி அணு, அழிக்க முடியாதது. அதாவது பிரிக்க முடியாதது. இந்தக் கொள்கை இன்றைய அணுயுகத்தில் மேலும் ஆய்வுக்குரியதாக இருக் கிறது. வாய்ப்பு வரும் பொழுது விளக்குவோம். அணு, என்றும் உள்ளது; படைக்கப்பட்டதல்ல. இப்பரமாணுக்களில் தான் உயிரற்ற உலகம் ஒடுங்குகிறது. அந்தப் பரமாணுக் களில் இருந்துதான், அவை ஒன்றோடொன்று சேருவதால் உலகம் யாவும் தோன்றுகிறது. நமது மனது, பேச்சு, மூச்சு ஆகியவை கூட அந்தப் பரமாணுக்களால் ஆனவை என்பது சமணர் கருத்து.

உயிரற்ற உலகின் தோற்றத்திற்கு அணுக்களே காரணம் என்ற கொள்கையை நியாயவைசேடிகம் என்ற சமயத்தினரும் ஓரளவு உடன்பட்டிருக்கின்றனர். ஆயினும், ஒரு சிறு வேறு பாடு இவ்விருவரிடை உண்டு. நியாயவைசேடிகர், “ நிலம், நீர், காற்று, நெருப்பு ஆகிய நான்கையும் ஒரேவித அணுக்கள் உண்டு.'' பண்ணுவதல்ல. ஒவ்வொன்றுக்கும் வேறுவேறு வகைத் தனித்தனி அணுக்கள் உண்டு.” என்று கூறு கின்றனர். இந்த நியாயவைசேடிகர் கொள்கைக்கும், சமணத் திற்கும் உள்ள முரண்பாடு யாதெனில், நியாயவைசேடிகர் தத்துவப்படி, அணுவுக்குக் குணம்-தன்மை உண்டு. ஆனால், சமணர் கொள்கைப்படி அணுவுக்குக் குணம்-தன்மை கிடை யாது. அணு, குணவியல்பு அற்றது என்ற கருத்தையே கிரேக்கத் தத்துவ ஞானிகளும் உடன்பட்டுக் கூறியுள்ளனர். ஆதலால், இப்பொழுது ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வரவேண் டிய செய்தி அணுவுக்குக் குணம் உண்டா? இல்லையா? என்பது. ஓர் அணுவுக்குக்கும்; பிறிதோர் அணுவுக்கும் குணத்தினால் வோறுபாடில்லையாயின் அணுவைப் பிரித்து அறிவது எப்படி? அணுக்கள் பன்மையானது எப்படி? இந்த வினாக்களுக்குச் சமணத்தில் விடைகாண்பது அரிது.

உலகத் தோற்றத்திற்குப் ‘புற்கலம்' என்று அழைக்கப் பெறும் அணுமட்டும் போதுமா? சமணரும் போதாதென்றே கருதி, ‘புற்கலம்' ஆகிய பரமாணுக்களோடு ஆகாசமும், காலம் என்ற தத்துவமும் சேரவேண்டும் எனக் கொண்டனர். ஆகாசமும், காலமும் அணுவிலிருந்து தோன்றா என்றும் அவை அநாதி என்றும் கொள்வர். நமது சித்தாந்தச் செந்

நெறியின்படி உலகுக்கு மூலம் மாயையாகும். அந்த மாயையிலிருந்தே காலமும், ஆகாசமும் தோன்றுகின்றன. இது பற்றி வாய்ப்பு வரும் பொழுது விளக்கி எழுதுகின்றோம்.

சமணர் ஆகாசத்தை இருபகுதியாகப் பிரிப்பர். ஒன்று பௌதிகப் பொருள்கள் நிறைந்த பகுதி. அதனை அவர்கள் "லோகாகாசம்" என்று குறிப்பிடுவர். பிறிதொன்று லோகாகாசத்திற்கு மேற்பட்ட பகுதி. இதனை "அலோகாகாசம்" என்று குறிப்பிடுவர். வினையின் பலன்களை நுகர்ந்து, இறுதியில் தன்னை உயிரற்ற தளையிலிருந்து விடுவித்துக் கொண்டு துன்பங்களின்று நீக்கம் பெற்ற உயிர், இன்பமயமாய் வீற்றிருப்பது அலோகாகாசத்தில்தான். அலோகாகாசம் என்பது தான் சமணர் கொள்கைப்படி புண்ணிய பூமி; இன்ப பூமி. அந்த இன்ப பூமியில்தான் பொற்கோட்டையில் அநாதி அருகபரமன் வீற்றிருக்கின்றான். இங்கு நமக்கு இயல்பாக ஏற்படுகின்ற ஐயம் உயிரற்ற பொருளின் தொடர்பிலிருந்து நீங்கிய—விடுதலை பெற்ற உயிர் சென்று அடைவது, உயிரற்ற பிரிவுப் பொருள்களுள் ஒன்றாகிய அலோகாகாசம்தானா? என்பதாகும். இது விசித்திரமாக இருக்கிறது.

உயிரற்ற உலகை விளக்குவதற்கு, அணுக்கள், காலம், இடம் ஆகிய மூன்று தத்துவங்களோடு இயக்கு சக்தி, நிறுத்து சக்தி ஆகிய இரண்டையும் சமணர்கள் கொண்டனர். சமண நெறிப்படி இயக்கு சக்தி தர்மம்; நிறுத்து சக்தி அதர்மம். செல்வ, நாம் நம்முடைய வழக்கத்தில் புண்ணியம், பாவம் என்று குறிப்பிடும் சொற்பொருள் வேறு. தர்மம், அதர்மம் என்பதன் சொற்பொருள் வேறு. அதுமட்டுமல்ல, நன்மை, தீமையைக்கூடச் சமணரின் தர்மம், அதர்மம் என்ற சொற்கள் குறிக்கவில்லை. சமணருடைய இயக்கு சக்தியாகிய தர்மம், தானே முதலில் இயங்காது. இயக்கமற்று இருக்கும் ஒன்றை அது இயக்காது. இயங்கத் தொடங்கிய பிறகு இடைவிடாது இயங்கிக்கொண்டிருக்கும். அதர்மமும் அப்படியே! அதாவது, தானே நிறுத்தமாட்டா; நிறுத்தப்பட்டதை அந்நிலையிலேயே வைத்திருக்கும். இந்த அடிப்படையில் ஆய்வு செய்தால் முதன் முதல் உலகு எங்ஙனம் இயங்கத் தொடங்கிற்று? என்ற வினா எழும். அந்த வினாவிற்கு விடை, சமணத்தில் நேற்றும் கிடைக்கவில்லை; இன்றுவரை கிடைக்கவில்லை; இனிமேலும் கிடைக்குமா? என்பது ஐயமே! அடுத்த கடிதத்தில் மேலும் ஆராய்வோம்!

இன்ப அன்புடன் அடிகளார்




## திருமங்கையாழ்வார்

[வித்துவான் திரு. கா. அ. மணவாளன், பி.ஏ., பி.ஓ.எல்.,]

"நெஞ்சுக்கிருள் கடிதீபம் அடங்கா நெடும்பிறவி
நஞ்சுக்கு நல்ல வமுதம் தமிழ நன்னூற்றுறைகள்
அஞ்சுக்கு இலக்கியம் ஆரணசாரம் பரசமயப்
பஞ்சுக்கனலின் பொறி பரகலான் பனுவல்களே"

கங்கையிற் புனிதமாய காவிரிநதி பாயும் சோழமண்டலத்தில் திருமங்கை என்னும் நாட்டில், திருக்குறையலூர் என்னும் பழம்பதியொன்றுண்டு. அவ்வூரில் வேளாளர்மரபில் கள்ளக்குடியில் கார்த்திகை மாதத்துக் கிருத்திகை நட்சத்திரத்தில் திருமங்கையாழ்வார் அவதரித்தார். இவ' நீலநிறமுடையவராயிருந்தமையால், இவர் தந்தை இவருக்கு நீலன் என்று பெயர் வைத்தார் இவர் தமது குடிக்கு ஏற்ப இளமையிலேயே பலவகை ஆயுதப் பயிற்சிகளிலும் தேர்ச்சி பெற்றுச் சோழ அரசனிடம் தானைத் தலைவராகப் பணியாற்றினர். சோழனை எதிர்த்துப் போரிட்ட பகை வேந்தர்களை வென்றமையால், பரகாலன் என்று அரசனால் பாராட்டப்பெற்றார். மேலும் தன்னாட்சிக்குட்பட்ட திருவாலி நாட்டிற்கு இவரை அரசனாக்கி மகிழ்ந்தான். திருமங்கை மன்னனும் நாட்டை நன்முறையில் ஆட்சிசெய்து வந்ததோடு, இசை, நாடகம் போன்ற பலவகையான கலைகளையும் வளர்த்துத் தாமும் அதில் ஈடுபட்டு வந்தார்.

இவ்விதமிருக்கையில் திருவாலி நாட்டைச் சேர்ந்த திருவெள்ளக்குலம் என்னும் ஊரில் வாழ்ந்த மருத்துவன் ஒருவன் அவ்வூர்ப் பொய்கையில் நீராடச் சென்றான். அப்பொய்கையில் தேவமாதர் பலர் வந்து நீராடுவது வழக்கம். அம்மருத்துவன் நீராட வந்தபொழுது அப்பொய்கையில் திருமாமகள் என்னும் தேவகன்னிகை தன்னுடைய தேவசரீரத்தை விட்டு மானுட சரீரத்தைப் பெற்றுத் தனியே குமுதமலர் கொய்து நின்றாள். மருத்துவனும் அப்பெண்ணைப் பார்த்துத் தனியே பொய்கையில் நீயிருக்கக்காரணம் என்ன என்று கேட்டான். அக்கன்னிகையும் தாம் தேவமாதர் பலருடன் நீராட வந்ததாகவும் அவர்கள் அவளைத் தனியே விட்டுவிட்டுத் தேவருலகம் சென்றதாகவும், தனியளான தன்னைக் காத்தருள வேண்டுமென்றும் வேண்டினாள். மகப்பேறில்லாத அம்மருத்துவனும் அப்பெண்ணைத் தன் பெண்ணாகவே கருதித் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்று தன் மனைவியிடம் ஒப்புவித்து வளர்த்து வரலானான். குமுதமலர் கொய்து நின்றபொழுது கண்டமையால் அப்பெண்ணுக்குக் குமுதவல்லி என்றே பெயரிட்டான். குமுதவல்லியும் நாளொருமேனியும், பொழுதொருவண்ணமுமாக வளர்ந்து வந்தாள். உரிய பருவம் வந்துற்ற காலை, தன்னுடைய குணங்களாலும் அழகாலும் சிறந்து விளங்கும் இவளுக்கு ஏற்ற கணவன் கிடைக்க வேண்டுமேயென்று மருத்துவன் கவலைப்பட்டான்.

இவ்விதம் இவன் வருந்தியிருக்கும் வேளையில் குமுதவல்லியின் அருங்குணங்களையும், அழகையும் கேள்வியுற்ற நீலனார், தான் அவளைத் திருமணம் செய்து கொள்ளவேண்டுமென்று விரும்பினார். உடனே தம் பரிவாரங்கள் சூழ திருநாங்கூரைச் சார்ந்த திருவெள்ளக் குளத்துக்கு வந்தார். நேராக அம்மருத்துவர் வீட்டிற்குச் சென்று அவருடன் உரையாடி வருகையில், குமுதவல்லி அங்கு கண்ணெதிரிற் படக்கண்டு அவள் அழகில் மயங்கி அவள் வரலாற்றையும் தெரிந்து கொண்டார். குமுதவல்லியைத் தனக்கு மணமுடித்துத் தரவேண்டுமென்று வேண்டினார். அதற்கு அம்மருத்துவரும் குமுதவல்லியைக் கலந்து ஆலோசியாமல் இசைவு தெரிவித்துத் திருமணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலானார். இச்செய்தியைத் தெரிந்து கொண்ட குமுதவல்லி தன் தந்தையிடம், சங்கு சக்கரப் பொறியொற்றிக் கொண்ட ஒரு வைணவர்க்கேயன்றிப் பிறர்க்கு யான் வாழ்க்கைப்படேன் என்று தன்கருத்தைக் கூறினாள். அதைக் கேட்ட ஆழ்வாரும் அருகிலுள்ள திருநறையூர்க் கோவிலுக்குச் சென்று, அப்பெருமாளிடம் வேண்டிப் பணிந்து, சங்கு சக்கர முத்திரைகளைப் பெற்று, பன்னிரு திருமண் காப்புக்களையும் உரிய இடங்களில் இட்டுக் கொண்டு சிறந்த வைணவராய்த் திரும்பி வந்தார். அதற்குப் பின்பும் குமுதவல்லி நாளொன்றுக்கு ஆயிரத்தெட்டுப் பக்தர்களுக்குக் குறையாமல் ஓராண்டுக்காலம் திருவமுது செய்வித்து, அவர்களுண்டசேடத்தையும், திருவடி தீர்த்தத்தையும் உட்கொண்டாலன்றி உம்மை நான் மணவாளராக ஏற்றுக் கொள்ளேன் என்று என்று கூற ஆழ்வாரும் எப்படியும் அவளை அடையவேண்டுமென்ற வேட்கையால் அதற்குடன் பட்டு அவ்விதமே செய்வதாகச் சபதம் செய்து கொடுத்தார். திருமங்கை மன்னனின் சபதத்தை எல்லோரும் ஏற்று அவருக்குக் குமுதவல்லியை நாடும் நகரமும் அறிய நல்லதோர் கண்ணாலம் செய்து வைத்தனர்.

அம்மங்கை நல்லாளான குமுதவல்லியின் விருப்பப்படியே தினமும் ஆயிரத்தெட்டுப் பக்தர்களுக்கு அமுது படைக்கும் பணியில் ஈடுபட்ட ஆழ்வார் அரச செல்வமனைத்தையும் அதற்கே செலவழித்தார். சோழ வேந்தனுக்குக் கட்ட வேண்டிய திறைப் பொருளையும் கட்டத் தவறினார். அரச தூதுவர்கள் வந்து கேட்டபொழுது இன்று, நாளை என்று பல தவணைகள் சொல்லிக் காலங் கடத்தி வரலானார். அதனால் வெகுண்ட அரசன் படைத்தலைவர்களையனுப்பிப் பிடித்து வருமாறு கட்டளையிட்டான். அவர்களும் தங்கள் படையோடு வந்து போர் புரிய, திருமங்கையாழ்வாரும் தம்முடைய ஆடன்மாவென்னும் குதிரையின்மீது அமர்ந்து போர் செய்து அவர்களைப் புறமுது கிட்டோடச் செய்தார். இதையறிந்த சோழன் தானே வந்து இவருடன் போர் செய்தான். அப்போதும் அரசனுடைய பெரும் படையையழித்துக் கருணையால் அரசனை ஒன்றும் செய்யாது வாளாவிருந்தார். இந்நிலையை அரசன் பயன் படுத்திக்கொண்டு ஆழ்வார் திருமுன்பே வந்து அவருடைய வீரத்தைப் பாராட்டி விரைவில் கப்பங்கட்டி விடுமாறு கூறி இவரை முக்கிய மந்திரியிடம் ஒப்படைத்துப் போனான். அவ்வமைச்சனும் இவரைப் புகழ்வது போல் நடித்து முடிவில் ஒரு தேவாலயத்தில் சிறை வைத்துவிட்டான். அவ்வாலயச் சிறையில் மூன்று நாட்கள் வரை ஆழ்வார் உணவில்லாமலிருந்து பெரிதும் துன்புற்றார். பின்பு கச்சியம்பதியில் கருணாமூர்த்தியாய் எழுந்தருளியிருக்கும் பேரருளாளர் என்னும் வரதராஜப் பெருமாள் இவர் கனவிலே தோன்றி 'ஆழ்வீர்' நீர் அஞ்சவேண்டாம்; காஞ்சிக்கு வந்தால் 'உமக்கு வேண்டும் பொருளை நாமே தருவோம் என்று கூறி மறைந்தார். ஆழ்வாரும் பெருமாளின் கருணையை எண்ணிப் போற்றிய

வராய்ப் பொழுது புலர்ந்தவுடன் அமைச்சரிடம் காஞ்சிபுரத்தில் நிதியுள்ளது; அங்கு வந்தால் தருவேன் என்று கூறினர். அமைச்சனும் அரசனது அனுமதி பெற்றுப் பரிவாரம் புடைசூழக் காவலோடு ஆழ்வாரைக் காஞ்சிக்கு அழைத்துச் சென்றான். அங்கு சென்றவுடன் நிதி இவர்க்குக் கிடைக்காமல் வருந்திய பொழுது மீளவும் பெருமாள் கனவிலே தோன்றி வேகவதியாற்றங்கரையில் வைப்புள்ள இடத்தைக் குறிப்பிட்டருளினர். ஆழ்வாரும் பெருமாள் குறித்த இடத்தில் பெருந்தனம் இருக்கக்கண்டு அரசனுக்குச் சேரவேண்டியதை அளித்து மீதமுள்ளதைத் தொண்டர் பணிக்குப் பயன்படுத்தினர். அரசனும் ஆழ்வாருடைய பெருமையை அறிந்து அவரளித்த செல்வத்தை அத்தொண்டர் பணிக்கே அனுப்பிவைத்தான்.

இவ்விதம் ஆழ்வார் கிடைத்த செல்வத்தையெல்லாம் பாகவதர்களுடைய பசிப்பிணியைப் போக்குவதில் பயன்படுத்தி, மேலும் அத்தொண்டினை இடையருது செய்யப் போதிய செல்வமின்றி வருந்தியிருந்தார். பின்பு நன்கு யோசித்துத் தம்முடைய உயிர் நண்பர்களான நீர்மேல் நடப்பான், நிழலிலொதுங்குவான், தாளூதுவான், தோலாவழக்கன் என்று சொல்லப்படும் நான்கு நன்பர்களுடன் கூடி வழிப்பறி செய்தாகிலும் இப்பணியை நிறை வேற்றவேண்டுமென்று முடிவு செய்தார். அவ்விதமே வழிப்பறி செய்து சூறையாடிய பொருளால் அடியார்களுடைய பசிப்பிணியைப் போக்கி மகிழ்ந்து வந்தார். இவர் கொள்ளையடிக்கும் செல்வங்களைத் தமக்குப் பயன் படுத்தாமல் பிறர்க்கே பயன்படுத்தி வந்தமையால் மிகவும் மனமுகந்த ஸ்ரீமந் நாராயணன் இவ்வாழ்வாரைத் திருத்திப் பணிகொள்ள வேண்டுமென்று எண்ணினர். அதன்படியே தான் ஒரு அந்தணன் வடிவில் நிறைந்த ஆபரணங்களை அணிந்து கொண்டு, திருமணக் கோலத்துடன் மனைவியோடு இவ்வாழ்வார் வழிபறிக்கும் வழியில் வந்தார். திருமணங்கொல்லை யென்னும் அவ்விடத்தில் ஓர் அரசமரத்தின் மீது அமர்ந்து அவ்வழியே வருவாரை எதிர்நோக்கியிருக்கும் ஆழ்வார் திருமணத் தம்பதிகளாய் வரும் அவர்களை ஆயுதங்களைக் காட்டி அச்சுறுத்தி அவர்கள் அணிந்திருந்த திருவாபரணங்களை யெல்லாம் வலிய வாங்கிக் கொண்டார். முடிவில் அம்மணமகன் காலில் அணிந்துள்ள வளையத்தைக் கழற்ற முடியாமல் தன்னுடைய பல்லாலே கடித்து வாங்க முயற்சி செய்தார். எப்படியோ தான் திருடிய அத்தனைச் செல்வங்களையும் பெரியதொரு மூட்டையாகக் கட்டிவிட்டார். ஆயினும் அம்மூட்டையை ஆழ்வாரால் தூக்க முடியவில்லை. அதனால் வெகுண்ட ஆழ்வார், அத்தம்பதிகளைப் பார்த்து நீங்கள் ஏதோ மந்திரம் போட்டு விட்டீர்கள். அதனால் தான் இம்மூட்டை கனக்கிறது, என்று தன்வாளை வீசி அச்சுறுத்தினர். அப்பொழுது அந்நாராயணன் ஆழ்வாரை நோக்கி அம்மந்திரத்தை உமக்குச் சொல்லுகிறோம் வாரும் என்று அருகில் அழைத்து அவர் செவியில் மந்திரங்களுக்குள்ளே மிகச் சிறந்ததான திருவெட்டெழுத்து என்னும் (ஓம் நமோ நாராயணாய) மந்திரத்தை உபதேசித்தருளினர்.

அத்தெய்வநாரணன் மந்திரத்தை உபதேசித்ததோடு நில்லாமல் கருட வாகனத்தின்மேல் திருமாமகளோடு இவருக்குக் காட்சியும் நல்கினர். இவ்விதம் கடவுளைத் தரிசித்ததனாலும் மந்திர மொழியைக் கேட்டதனாலும், இறைவனுடைய திருவடியில் தலைமுடிபடப் பல்லாலே காலாழியைக் கழற்ற முயன்றதனாலும் ஆழ்வார் அறியாமை நீங்கி பரிபூரணத் தத்துவ ஞானம் கைவரப் பெற்று, நால்வகைக் கவிகளையும் பாடவல்ல புலமை பெற்று விளங்கினர். இவ்விதம் புலமைபெற்ற

ஆழ்வார் 'வாடினேன் வாடி வருந்தினேன்' என்று தொடங்கி 'நலம் தருஞ்சொல்லை நான் கண்டு கொண்டேன் நாராயணாவென்னும் நாமம்' என்று திருநாராயண மந்திரப்பெருமையை வாயாரப் புகழ்ந்து பாடலுற்றார். நம்மாழ்வரால் அருளிச் செய்யப் பட்ட நான்கு வகைத் திவ்வியப்பிரபந்தங்களுக்கும், அங்கங்களாகும்படி பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்னும் ஆறு திவ்வியப் பிரபந்தங்களைத் திருவாய் மலர்ந்தருளி திருமங்கையாழ்வார் என்று எல்லோராலும் கொண்டாடப் பெற்றார்.

இத்திருமங்கையாழ்வார் பத்ரீநாத் என வழங்கும் பதரிகாற்சிரமம் முதலான வடநாட்டுத் திருப்பதிகளிற் சென்று தண்டமிழ்ப் பாவால் அப்பதிகளைப் பாடிப் பின்பு தொண்டை நாட்டிலுள்ள திருவேங்கடம், திருவெவ்வுள், திருவல்லிக்கேணி, திருக்கடன்மல்லை முதலிய கோயில்களையும், கச்சியம்பதிப் பெரிய கோயில்களையும் ஈரத்தமிழால் இசையோடு பாடிச் சென்றார். பின்பு சோழநாட்டிலுள்ள சீர்காழி வழியாகப் பல கோயில்களையும் பாடிச் செல்லும்பொழுது இவருடைய சீடர்கள் இவருக்கு முன்னே வழக்கப்படி "நாலுகவிப் பெருமாள் வந்தார் நங்கலியர் வந்தார் ஆலிநாடர் வந்தார், அருள்மாரி வந்தார்" என்று இவ்விதம் பலவிருதுகளைக் கூறிச் சென்றனர். அப்பொழுது திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய தொண்டர்கள் வந்து 'எங்கள் நாயனாருள்ளவிடத்தில் இவ்விதம் விருதூதிச் செல்லக் கூடாது' என்று தடுத்து நிறுத்தினர். ஆழ்வாரும் செய்தியறிந்து திருஞானசம்பந்தரைக் கண்டுவாதம் செய்ய வேண்டுமென்று விரும்பினார். திருஞானசம்பந்தரும் ஆழ்வாருடைய விருப்பத்தையறிந்து முதலில் ஆழ்வாரை ஒரு வித்தாரக் கவிபாடுமாறு கேட்டார். ஆழ்வாரும் காழிச்சீராம விண்ணகரம் என்ற சீர்காழியில் கோயில் கொண்டிருக்கும் தாடாளப் பெருமாளைப் பற்றி "ஒருகுறளாய் இருநிலம் மூவடி மண்வேண்டி" என்று தொடங்கிப் பத்துப் பாடல்களைப் பாடியருளினர். அதைக்கேட்ட திருஞானசம்பந்தர் ஆழ்வாருடைய புலமையையும், கவிதை இயற்றும் ஆற்றலையும், கவியின் பத்தையும் சுவைத்து, மிகவும் மகிழ்ந்து உமக்கு இவ்விருதுக்கள் தகும் என்று கூறித் தம் கையிலிருந்த வேலையும் அவருக்குப் பரிசாகக் கொடுத்துப் போற்றினர். இவ்விதம் வெற்றிவேல் பெற்றுச் சங்கத் தமிழ்மாலையை எல்லாத் தலங்களுக்கும் சூட்டித் தம்முடைய சொந்த ஊரான திருவாலி-திருநகரி-திருக்குறையலூர்-திருநாங்கூர் முதலிய திவ்விய தேசங்களை அந்தமிழ்ப்பாவால் பாடிப் பின்பு திருவரங்கத்தை அடைந்து அரங்கன் செய்யதாளிணைகளில் பல பதிகங்களைப் பாடிச் சமர்ப்பித்தார்.

அப்பொழுது நம்பெருமாள் ஆழ்வார் கனவிலே தோன்றி 'நமக்குத் திருமாமணி மண்டபம், விமானம், கோபுரம், பிராகாரம், திருமதிள் முதலியவை கட்டித் திருப்பணி செய்ய வேண்டுமென்று நியமித்தார். ஆழ்வார் அக்கட்டளையைத் தலைமேற்றாங்கி அதற்குரிய செல்வங்களைப் பெறுவதற்கு தம்முடைய ஆருயிர் நண்பர்களான தாளூதுவான், தோலா வழக்கன், நீர்மேல் நடப்பான், நிழலிலொதுங்குவான் என்ற நால்வருடன் புறப்பட்டுச் சென்றார். அந்தக்காலத்தில் நாகப்பட்டினத்திலுள்ள ஒரு பௌத்தக் கோவில் கோபுரத்தில் பௌத்தர்களால் தங்கத்தாலான புத்தர் சிலையொன்று வைக்கப்பட்டுள்ளது என்பதையறிந்து அச்சிலையை எப்படியாவது களவாடிக் கொண்டு வந்தால் நம்பெருமாளுடைய திருப்பணிகளைச் செய்து முடிக்கலாம் என்று திட்டமிட்டனர்.

ஆழ்வாரும் திட்டமிட்ட படியே தோழர்களுடன் நாகைக்குச் சென்று அக்கோபுரத்தை ஒருவருக்கும் தெரியாமல் இரவு வேளையில் அணுகிய பொழுது அப்புத்தவிக்கிரகத்தைச் சுற்றி ஒரு எந்திரம் சுற்றிக்கொண்டிருப்பதைக் கண்டார். அந்த எந்திரத்தை வாழைத் தண்டுகளைக் கொடுத்து நிறுத்திப் பின்புத் தம் தோழர்களில் ஒருவனை அவ்வழியே இறக்கி அத்தங்கப் பதுமையை எடுத்து வந்தார். அவ்விக்கிரகத்தை உருக்கிச் செல்வமாக்கித் திருவரங்கனுக்குத் திருமதிலும், திருக்கோபுரமும், விமானமுமாகிய திருப்பணிகளைச் செய்தார். திருமதிள் கட்டும் பொழுது தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலை கட்டுதற்குரிய மலர்களைச் சேர்த்து வைக்குமிடம் நடுவில் குறுக்கிடவே, அந்த இடத்தை அழிப்பது அபசாரம் என்று கருதி அதனையும் சேர்த்து வளைத்து மதில் கட்டுவித்தார்.

இவ்விதம் பல திருப்பணிகளையும் செய்து முடித்த பின்பு திருவரங்கன் திருவருளைப் பரிபூரணமாகப் பெற்று அவனிடம் விடை பெற்றுக் கொண்டு திவ்விய தேசயாத்திரை தொடங்கினார். திருக்கண்ணபுரம் முதலிய சோழநாட்டுத் திருப்பதிகளையும், திருப்புல்லாணி, திருக்குறுங்குடி முதலிய பாண்டிய நாட்டுத் திருப்பதிகளையும், மற்றும் தென்னாட்டுத் திருப்பதிகளுள் மிகச் சிறந்ததான திருமாலிருஞ்சோலை, திருக்கோட்டியூர் முதலிய திவ்விய தேசங்களையும் பாடிப் பெரிய திருமொழியை முடித்தார். மறுபடியும் திருவரங்கன் நினைவு வரவே நம்பெருமாள் சந்நிதிக்கு வந்து திருநெடுந்தாண்டகம் பாட, அதைக்கேட்ட நம்பெருமாள் மிகவும் மகிழ்ந்து ஆழ்வாரை நோக்கி 'நீர் வேண்டும் வரம் கேட்க' என்று பணித்தார். ஆழ்வாரும் மாறனாகிய நம்மாழ்வார் இயற்றிய தமிழ் மறையாகிய திருவாய் மொழிக்கு விழா நடத்த வேண்டுமென்று கருதி, மார்கழி மாதத்தில் வைகுண்ட ஏகாதசிக்கு முன்னும் பின்னுமாக இருபது நாட்களிலும் எம்பிரானாகிய நீர் பிராட்டியோடு இனிதமர்ந்து, திவ்வியப் பிரபந்தங்களைத் திருச்செவி சாற்றியருள வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். நம்பெருமாளும் தமிழ்வேட்கையால் அவ்வாறே கேட்க இசைந்தார். அன்று தொட்டு இன்றுவரை இத்தமிழ் மறைவிழா, மார்கழி மாதத்தில் மிகவும் சிறப்பாகத் திருவரங்கத்தில் கொண்டாடப் படுகிறது.

இவ்விதம் குமுதவல்லியாரோடு பல திவ்விய தேசங்களைப் பாடிய ஆழ்வார் இறுதியில் மிகவும் விரக்தராய் திருக்குறுங்குடியை அடைந்தார். அங்குக் கோயில் கொண்டுள்ள நம்பியைத் தொழுது யோக வழியில் ஆழ்ந்து தம் திருமேனி நீத்துப் பரமபதம் அடைந்தார். வழிபறித்தலாகிய கொடுமையைச் செய்தாலும், அச்செல்வத்தை அடியார் திறத்தும், அரங்கன் திறத்தும் பயன் படுத்தியமையாலும், அமுத மயமான சங்கத் தமிழ்ப் பாமாலைகளை அருளியமையாலும், இவர்தம் தொண்டு ஈடு இணையற்ற தொண்டாகப் போற்றப்படுகின்றது. இவருடைய அவதார நன்னாளை பொய்யில்லாத மணவாளமாமுனிவன் திருவாக்கால் போற்றுவோம்.

பேதைநெஞ்சே! இன்றைப் பெருமை யறிந்திலையோ
ஏது பெருமை யின்றைக்கென் றென்னில்—ஓதுகின்றேன்
வாய்த்தபுகழ் மங்கையர்கோன் மாநிலத்தில் வந்துதித்த
கார்த்திகையில் கார்த்திகைநாள் காண்

மாறன் பணித்த தமிழ்மறைக்கு மங்கையர் கோன்
ஆறங்கம்கூட வவதரித்த—வீறுடைய
கார்த்திகையில் கார்த்திகைநாள் இன்றென்று காதலிப்பார்
வாய்த்தமலர்த் தாள்கள் நெஞ்சே வாழ்த்து.




## ஸ்ரீ பெரும்பூதூர்க் கோயில்

திரு. கே. எஸ். நரசிம்மன்., பி.ஏ., பி எல்., ஐ.ஏ.ஸ்.,
ஆணையர், அறநிலையத்துறை, சென்னை.

முன்னுரை :

சென்னைக்கு மேற்கில், காஞ்சிபுரத்துக்கு வடகிழக்கில், திருவள்ளூர் நிலையத்துக்குச் சுமார் 11 கல் தொலைவில், ஸ்ரீபெரும்பூதூர் என்னும் சிறந்த வைணவத் தலம் உள்ளது. இங்கே, அம்பரீஷன் என்னும் பெரு வேந்தனின் பெயரன் ஆகிய அரீதன் என்னும் அரசன், தனக்கு நேர்ந்த ஒருபெரும் பாவத்தைப் போக்கிக்கொள்ள, வசிட்டமுனிவரின் உபதேசப்படி வந்து, இங்கு உள்ள அனந்த தீர்த்தத்தில் நீராடி, இத்தலத்தில் எழுந்தருளி விளங்கும் ஆதிகேசவப் பெருமாளை வழிபட்டு அருள்பெற்று உய்ந்தான். அவ்வரசன் இத்தலத்தைப் புதுப்பித்துப் பெரிய நகரம் ஆக்கினான். அதனால் இதற்குப் பெரும்பூதூர் (பெரும் + புது + ஊர்) எனப் பெயர் ஏற்பட்டது. வடமொழியில் இதற்குப் பூதபுரி எனப் பெயர் வழங்கும். உருத்திரனால் சாபம் பெற்ற பூதகணங்கள், இத்தலத்திற்கு வந்து ஆதிகேசவப் பெருமாளை வழிபட்டுச் சாபம் தீரப் பெற்றதனால் இதற்குப் பூதபுரி எனப்பெயர் ஏற்பட்டது என்பது தலவரலாறு.

இராமாநுசர் :

ஸ்ரீபெரும்பூதூர் வைணவசமயச் சான்றோர்கள் ஆகிய ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்படவில்லையாயினும், இத்தலம் வைணவ சமயப் பெரு மக்களாற் பெரிதும் போற்றி அன்புடன் வழிபடப் பெற்று வருகின்றது. அதற்குக் காரணம், வைணவ சமயத்தின் பெருஞ் சான்றோர்களில் தலைசிறந்த ஒருவராகிய இராமாநுசர் (கி.பி. 1017–1137) இங்கு அவதரித்தருளியதேயாகும்.

'திருமால்' என்னும் சொல் 'திருவுடன் கூடிய மால்' (திரு+மால்) எனப் பொருள்படும். திருமகளுடன் கூடிய நிலையிலுள்ள பெருமாளை வழிபடுவதன் மூலமே, நாம் எல்லா நலன்களையும் எளிதிற் பெறமுடியும்

ஆதலின் திருவுடன் கூடிய மாலைப் போற்றி வழிபடும் நெறியே திருமால்நெறி (ஸ்ரீ + வைஷ்ணவம்) எனப்படும். அத்திருமால் நெறிக்குரிய அருட்பெருஞ் சான்றோர்கள், ஆழ்வார்கள் என்றும், ஆசாரியர்கள் என்றும் இருதிறப்படுவர். ஆசாரியர்களின் வரிசையில் மிக்க சிறப்பிடம் பெறுபவர் இராமாநுசர். திருவாய்மொழி ஆயிரத்தையும் ஈன்றளித்த முதல் தாய் நம்மாழ்வார் என்றால், அவற்றை உலகிற் பரப்பி வளர்த்துச் செழிப்பித்த செவிலி ஆகிய இதத்தாய், இராமாநுசரே எனப் பெரியோர்கள் போற்றியுள்ளனர். இவருக்கு முன்பெல்லாம் 'பரம வைதிக சித்தாந்தம்' என்றே வழங்கப் பெற்று வந்த திருமால்நெறியானது, இவருக்குப் பின்னர், இவர் பெயராலேயே "எம்பெருமானார் தரிசனம்" என்னும் சிறப்புப் பெயரால் வழங்கப் பெறுவதாயிற்று.

இராமாநுசர் சிறப்பு :

இராமாநுசர் திருமால் நெறிக்குரிய விசிட்டாத்துவைதம் என்னும் தத்துவக் கொள்கையை விளக்கிப் பரப்பியருளிய பெரும் சான்றோர் ஆவர். 'பிரஸ்தானத்திரயம்' என்று போற்றப் பெறும், பிரம்மசூத்திரம், உபநிடதம், பகவத்கீதை ஆகிய மூன்றற்கும், மிகச் சிறந்த பேருரை ஆகிய ஸ்ரீபாஷ்யம் என்னும் நூலை, இராமாநுசர் இயற்றி அருளியுள்ளார். நவநிதிகள் போலவும், நவரத்தினங்கள் போலவும், 1. ஸ்ரீபாஷ்யம் 2. வேதாந்த தீபம் 3. வேதாந்தசாரம் 4. வேதாந்தசங்கிரகம் 5. கீதா பாஷ்யம் 6. சரணாகதிகத்தியம் 7. ஸ்ரீரங்கபாஷ்யம் 8. ஸ்ரீவைகுண்டகத்தியம் 9. நித்தியம் என்னும் ஒன்பது சிறந்த நூல்கள் இராமாநுசரால் அருளிச் செய்யப் பெற்றுள்ளன.

ஸ்ரீபெரும்பூதூரில் வாழ்ந்து வந்த ஆசூரி கேசவப்பெருமாள் என்னும் தந்தையார்க்கும், பூமிப்பிராட்டியார் என்னும் தாயாருக்கும் மைந்தராகச் சித்திரைத் திருவாதிரை நாளில் இராமாநுசர் தோன்றியருளினார். இவருக்கு இளையாழ்வார் உடையவர் பாஷ்யகாரர் எதிராஜர் எம்பெருமானார், கோயில் அண்ணர் என்னும் சிறப்புப் பெயர்கள் பல உண்டு. திருக்கோட்டியூர் நம்பிகள் இடத்தில், பதினெட்டு முறை திருவரங்கத்தினின்று கால்நடையாகச் சென்று, திருவெட்டெழுத்து மந்திரத்தையும், சரம சுலோகத்தின் நுண்பொருள் நலன்களையும், உபதேசிக்கப் பெற்ற இவர், பிறர் எவர்க்கும் தெரிவிக்கலாகாது என நம்பிகளால் கண்டிப்பாக அறிவுறுத்தப் பெற்றிருந்தும், தாம் நரகத்திற்குச் செல்ல வேண்டி நேரினும், உலக மக்கள் அனைவரும் உய்தி பெறுதல் வேண்டும் என்னும் பெருங் கருணையினால், திருக்கோட்டியூர்க் கோபுரத்தின் மீது ஏறி அதனை அனைவரும் அறிந்து கொள்ள வெளிப்படையாக எடுத்து உரக்கக் கூவி, உபதேசம் செய்து உவகையுற்றார் என்பது வரலாறு. இதனால், இராமாநுசரின் பரந்த பெருங் கருணை உள்ளமும், மக்கள் அனைவரையும் வேறுபாடின்றி நோக்கும் விரிந்த மனப்பான்மையும், புலனாதல் காணலாம். கூரத்தாழ்வார் முதலியாண்டார் எம்பார் முதலிய பலரும், இவருடைய மாணவர்களே யாவர். மற்றும், வட இந்தியாவில் சிறந்து விளங்கிய இரா

மானந்தர், கபீர்தாசர், துளசிதாசர், ஞானதேவர், நாமதேவர், வல்லபர், நிம்பார்க்கர் முதலிய வைணவ ஆசாரியர்கள் பலரும், இராமாநுசரின் நெறியினைப் போற்றித் தழுவியவர்களேயாவர்.

வைணவ சமய வளர்ச்சி குறித்து, இராமநுசர் ஆற்றியருளிய அருஞ் செயல்கள் பலப்பல. அவர் தம் பெருமைக்கு எல்லையேயில்லை. இராமாநுசர் மிகச் சிறந்த ஒரு பெரும் சமயச்சான்ரோர்; ஒப்புயர்வற்ற தத்துவ ஞானச் செல்வர்; மிக்க பெருங் கருணை உள்ளம் உடையவர்; ஆற்றல் மிக்க செயல்வீரர்; நிறுவனங்களைத் தோற்றித் நிர்வகிக்கும் திறன்மிக்க ஆட்சியாளர். ஏழை எளிய மக்களின்பால் மிகவும் பரிவிரக்கம் கொண்டு, அவர்களைப் பெரிதும் முன்னேற்றினர். சமயச் சடங்குகளில் தூய்மையும் புனிதமும் நிலவச் செய்தார். புதிய சிறந்த வழிபாட்டு நெறிமுறைகளை மக்களின் நலங்கருதி வகுத்தளித்தார். உயரிய ஆன்மீக வழிபாட்டு நெறிமுறைகளை, எத்தகைய வேறுபாடுமின்றி, மக்கள் அனைவருக்குமே உரியதாகப் பொதுவாக்கினர். தமது காலத்தில் 74 சிம்மாசனாதிபதிகளையும், கோதைகள் என்னும் 300 பெண் அடியார்களையும், 700 துறவிகளையும், 12000 ஏகாங்கிகளையும், எண்ணில்லாத வைணவ அடியார்களாகிய பாகவதர்களையும் உருவாக்கி வளர்த்த பெருமை, இராமாநுசர்க்கே உரியது.

ஸ்ரீ பெரும்பூதூர் :

இத்தகைய பெருமாட்சிமை வாய்ந்த இராமாநுசர் அவதரித்தருளிய சிறப்புமிக்கது ஸ்ரீபெரும்பூதூர். இற்றைக்கு 600 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்திருந்த மணவாள மாமுனிகள் என்னும் வைணவப் பெருஞ் சான்ரோர்,

"இதுவே பெரும்பூதூர்! இங்கே பிறந்தோ
எதிராசர் எம்இடரைத் தீர்த்தார்;—இதுவேதான்
தேங்கும் பொருநல் திருநகரிக்கு ஒப்பான
ஓங்கு புகழ்உடைய ஊர்."

"எந்தை எதிராசர் எம்மை எடுத்தளிக்க
வந்தபெரும் பூதூரில் வந்தோமோ—சிந்தை
மருளோ! தெருளோ! மகிழ்மாலை மார்பன்,
அருளே இப் பேற்றுக்கு அடி."

—மணவாள மாமுனிகள்.

என்று, இத்தலத்தினை வியந்து புகழ்ந்து மிகவும் உருக்கமாகப் பாடியருளியிருப்பது, நாம் அறிந்து இன்புறத்தக்கது.

கோயில் அமைப்பு :

இங்குள்ள திருக்கோயில் கிழக்கு நோக்கியுள்ளது. சுவாமி பெயர் ஆதிகேசவப் பெருமாள். அம்பாளின் பெயர் எத்திராஜநாதவல்லித் தயார். கோபுர வாயிலின்முன் பதினறுகால் மண்டபமும், நாலுகால் மண்டபமும் உள்ளன. கோயிலின் எதிரில் மேற்கு நோக்கி நூற்றுக் கால் மண்டபமும் உள்ளது. அதன் உள் சென்ருல், இராமாநுசரின் அவதாரத்தலம் உள்ளது. அதற்கு இடப்புறத்தில் அவர்தம் மாணவ ராகிய கூரத்தாழ்வார் சந்நிதி, உள்ளது. வலப்புறத்தில் வடக்குநோக்கி மணவாளமுனிகள் கோயில் அமைந்திருக்கின்றது. மற்றும் இங்குள்ள ஆழ்வார்கள் சந்நிதி, ஆண்டாள் சந்நிதி, தாயார் சந்நிதி, இராம பிரான் சந்நிதி, வேணுகோபாலன் சந்நிதி முதலியன சிறப்புற அமைந் துள்ளன. மணவாள மாமுனிகள் ஸ்ரீபாஷ்ய விரிவுரைகள் நிகழ்த்திய இடமும் உள்ளது. இவை அனைத்தும் அன்பர்கள் அனைவரும் சென்று கண்டு வழிபட்டு மகிழத் தக்கவையாகும்.

---



---




## " தமிழகத்து அறிவாரய்ச்சியியலின் பொதுமை "

[வித்துவான் திரு. வை. இரத்தினசபாபதி, எம்.ஏ., பி.ஓ.எல்.,]

மனிதனுடைய நாகரிக வளர்ச்சிக்கு இயற்கைக் காட்சிகள் பெருந்துணை புரிந்தன என்று கூறலாம் உலகில் உள்ள அனைத்து உயிர்களும் அறிவின் அடிப்படையில் பிரிக்கப் பெற்றவைகளே யென்ருலும் ஆறறிவு பெற்ற மனிதன் ஏனை அறிவுடைப் பொருள்களிலிருந்து வேறுபட்டு வருகின்ருன். ஐந்து அறிவு வரை உடைய எல்லா உயிர்களும் அஃறிணை என்றும் ஆறறிவு உடைய மனிதன் உயர்திணை என்றும் பிரித்து ஆளப்பெறும் வழக்கைத் தமிழிலக்கணம் வரையறை செய்திருக்கிறது.

இனி, ஐந்தறிவு பெற்ற மிருகங்களுக்கும், ஆறறிவு பெற்ற மனிதனுக்கும் உள்ள அடிப்படை வேறுபாடுகள் சிலவற்றையும் நம் முன்னோர் அமைத்துக் காட்டியுள்ளனர். ஐந்தறிவு மிருகங்களுக்குக் கால்நடைகள் என்று பெயர். ஆறறிவு பெற்ற மனிதனும் காலால் நடப்பதால் கால் நடை தானே? அவ்வாறிருக்க, மனிதனைக் கால்நடை என்று சொல்வதில்லையே? என்ற வினு எழும். இதற்கு இக்காலத்தில் கூறப் பெறும் விளக்கங்களைக் காணலாம்.

(1) மனிதன் தலையின் ஆணையால்-சிந்தனையால்-அறிவின் தெளிவினுல் நடக்கிருன்; மிருகங்கள் அறிவுத் தெளிவு இன்றி-ஆராய்ந்து பார்த்தல் இல்லாமல் நடப்பதால் அவைகள் கால்நடைகள் எனப் பெறுகின்றன. இத்தகைய அடிப்படையில் நோக்கினுல் மிருகங்கள் காலால் நடக்கின்றன; மனிதன் தலையால் நடக்கிருன் (அறிவால் நடக்கிருன்) என்ற பொருளை அமைத்துக் கொள்ளலாம்.

இக்கருத்தைப் பொது நோக்காக அமைத்துச் சிந்திக்கலாம். "யானைக்கும் அடி சறுக்கும்" என்பது ஒரு பழமொழி. இப்பழமொழியானது அடிப்படையாக ஒத்துக்கொள்ளும் உண்மை ஒன்றினை நாம் உணர்தல் வேண்டும். யானை இயல்பாகவே சறுக்கி விழாமல் முன்னெச்சரிக்கையுடன் நடக்கும் ஆற்றல் உள்ளது என்பதே. யானையானது வலது முன்னங்காலை வைத்து ஊன்றி, அசைத்துப் பார்த்து, ஊன்றிய இடம் வலிமையாக இருந்தால்தான் வலது முன்னங்காலை ஊன்றி இடது முன்னங்காலை எடுக்கும். மிருகங்களே அன்றிப் பறவைகள் கூட அறிவாரய்ச்சியைச் செலுத்திப் பலவகை நடவடிக்கைகளைச் செய்கின்றன என்பதை மேலை நாடுகளில் நிகழ்த்தப் பெற்ற மனோதத்துவச் செயல்முறைத் தேர்வுகளின் மூலம் அறிகிருேம்.

(2) மனிதன் நடப்பதில் முழுமைபெற்றவன். மிருகங்கள் முதலியவை கால்பங்குதான் நடக்குங்கலையில் வல்லமை பெற்றவை. இங்கே கால் என்பது எண்ணல் அளவைப் பெயர். சாதாரணமாக நடப்பது கால்பங்கு; மூச்சை அடக்கி மென்மையாக, அதிக வேகமாகவோ அதிக மெதுவாகவோ இன்றி இடைப்பட நடத்தல் என்று இவ்வாருக நடத்தலை ஒரு கலையாக ஆக்கி அழகுபெற நடப்பது அரைப்பங்கு; வழியின் எல்லை, நடக்கும் உயிர்ப் பொருளின் ஆற்றலின் எல்லை இவைகளை அறிந்து நடப்பது முக்கால்பங்கு; பயனை மதிப்பிட்டு உணர்ந்து நடப்பது முழுமை வாய்ந்த நடை. இத்தகைய பகுப்பின் அடிப்படையில் நடக்கும் முறையை அளவிட்டுப் பார்த்தால் 'கால்நடை' என்று கூறப்பெறும் மிருகங்கள் நடத்தற் கலையின் கால்பங்கைத்தான் மேற்கொண்டு வாழ்கின்றன ஆகையால் 'கால்நடை' என்ற பெயரைப் பெற்றன என்று கூறுவர்.

இது ஒருபயனுள்ள விளக்கமே. ஒரு கலையின் தோற்றம் முதல் முடிவு வரையில் நன்ருக ஆய்வும் வரையறையும் செய்து இவ்வாறு பெயர் அமைத்தார்கள் என்று குறிப்பிடும் போது, தமிழகத்து முன்னுள் சான்ருேர்கள் அறிவாராய்ச்சியையும் பொருளாராய்ச்சியையும் இணைத்து ஆராயும் ஒரு முழுமை நோக்கைப் பின்பற்றி வந்திருக்கிருர்கள் என்பதை அறியலாம். ஆயின் அத்தகைய மரபுநெறி இன்றுவரை பரவி வளராதது தமிழக அறிவாய்ச்சியியலில் அமைந்து விட்ட தவக்குறை.

தமிழர்கள் தம் வாழ்வியலைப் பற்றிய அறிவாராய்ச்சியில் ஒரு முழுமை நோக்கைக் கடைப்பிடித்து ஆய்ந்து வந்தவர்கள் என்பதை மேலும் ஒரு எடுத்துக் காட்டாற் காணலாம். இவ்வெடுத்துக் காட்டு நம் வாழ்வியலுக்கு-வாழ்வியல் அடிப்படையில் எழும் அறிவாராய்ச்சியியலுக்கு மிகவும் தேவையான ஒன்று.

திருமணக்காலத்தில் மணமகனும் மணமகளும் கை பிணைத்துத் தீவலம் செய்தல் ஒரு சடங்கு. இதனைக் 'கவவுக்கை' எனச் சங்க இலக்கியம் பேசும். மணமகனின் வலதுகைச் சிறுவிரலும், மணமகளின் இடது கைச் சிறுவிரலும் இணைக்கப் பெறுகின்றன. இப்பிணைப்பில் வாழ்க்கையின் உள்ளீடான ஒரு அடிப்படைத் தத்துவத்தை நம் முன்னோர்கள் அமைத்துள்ளனர். ஒரு கணவனும் மனைவியும் இணைந்து வாழும் இவ்வுலக இல்லறத்தில் இருவரும் பங்கு கொள்ளும் அளவு முறை என்ன? என்பதை வரையறுத்துக் கூறுகிறது இச்சிறிய சடங்கு

கையில் உள்ள ஐந்து விரல்களும் ஐந்து தத்துவங்களைக் குறிக்கின்றன. பெருவிரல் இறைவனைக் குறிப்பது; ஆள்காட்டி விரல் அல்லது சுட்டு விரல் உயிரைக் குறிக்கும், நடுவிரல் ஆணவ மலத்தையும்; ஆழிவிரல் கன்மமலத்தையும், இறுதியில் உள்ள சிறுவிரல் மாயை மலத்தையும் குறிக்கும். உயிராகிய சுட்டுவிரல் ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்களோடு கூடியிருப்பது இயற்கை-ஆனல் அந்த உயிர் மூன்றுமலங்களையும் நீங்கி, இறைவன் திருவடியைச் சேர வேண்டும் என்ற தத்துவத்தைக் குறிப்பதாகச் 'சின்முத்திரை' என்ற

அடையாளத்துக்குத் தத்துவ விளக்கம் கூறுவர். அவ்வடிப்படையில் மேலும் நம் சிந்தனையைத் தொடர்ந்தால் ஒரு உண்மை கிடைக்கும். கணவனும் மனைவியுமாக இணையும் இணைப்பில் இருவருடைய பெரு விரல்களையும் இணைப்பதில் பயன் இல்லை. ஏனெனில் இருவரிடத்திலும் உள்ள பதித்தன்மைகள் இணைவதாற் பயன் இல்லை. இருவருடைய சுட்டுவிரலும் இணைவன என்றால் இருவர் உயிரும் இணைகின்றன என்பது பொருள். உயிரோடு உயிர் இணைதல் இல்லை, இருவருடைய நடுவிரலும் இணைதல் என்றால், ஆணவமலம் இணைதல் ஆகும். ஒரு உயிரைப் பற்றிய ஆணவமலமும் வேறு உயிரைப் பற்றிய ஆணவமலமும் அதாவது கணவனுடைய ஆணவமலமும் மனைவியினுடைய ஆணவ மலமும் ஒரே தன்மையுடையன அல்ல. இல்லற இணைப்பின் மூலம் ஆண வத்தை இணைத்துக் கொண்டால் அதனால் அடையக்கூடிய பயன் இல்லை. இனி, ஆழி விரலை இணைத்தால் கன்மாவை இணைப்பதாக முடியும். ஒரு உயிர் செய்த கன்மவினை இன்னொரு உயிர் செய்த கன்மவினையோடு இணைதல் முடியாது. எனவே, கணவன் செய்த கன்ம வினையோடு மனைவி செய்த கன்மவினை ஒத்து வருதல் இல்லை. இனி இறுதிவிரல் மாயை மலத்தைக் குறிக்கும். உலக இன்பத்துக்குக் காரணமாகிய உடம்பு, இன்பத்தை அனுபவிப்பதற்குரிய கருவி இன்பத்தை அனு பவிப்பதற்குரிய இடமாகிய உலகம்; இன்ப அனுபவம் ஆகிய எல்லாம் மாயையை முதன்மையாகக் கொண்டு அமைக்கப் பெற்றவை களே. மாயையை அடிப்படையாகக் கொண்ட உலகியல் வாழ்வு என்ற வகையில் இருவரும் இணைக்கப் பெறுகிறார்கள், என்ற தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டே இருவரின் சிறுவிரல்கள் இணைக்கப் பெறுகின்றன. இச்சிறுவிரல் இணைப்பின் மூலமே இருவரும் தங்கள் தங்கள் கன்மவினைகளையும் ஆணவங்களையும் நீக்கிக்கொள்ளப் பாடு படுதல் வேண்டும் என்பது தத்துவம். இத்தத்துவத்தை உணர்ந்தால், தமிழர்கள் தத்துவ நோக்கையும் வாழ்வியற் போக்கையும் எவ்வாறு இணைத்துக் கண்டும், காட்டியும் இருக்கிறார்கள் என்பது புலனாகும்.

வாழ்க்கையின் ஒவ்வொரு சிறு சிறு நிகழ்ச்சியையும் அறிவியற்கண் கொண்டு பார்த்து, முழுமையும் தெளிவும் பெறுமாறு அமையப் பெற்ற சொற்களாலும் செயல்களாலும் அமைத்துக் கொடுத்த தமிழகத்துச் சான்றோர்களின் திறமையை வியவாமல் இருக்க முடியாது.

ஆனால், 'கால்நடை' என்ற சொல்லமைப்புக்கு இரண்டாவதாக அமைக்கப்பெற்ற விளக்கம் அத்துணையளவுக்குச் சரியானதுதானா? என்பது ஐயப்பாட்டுக்கு உரியதே.

(3) இனி, வேறொரு விளக்கமும் கூறப்பெறுகிறது. கருமையாகிய ஆட்டை வெள்ளாடு என்றும், சுடுகாட்டை நன்காடு என்றும் கூறுவது போல இதுவும் ஒரு மங்கல வழக்கு. மனிதர்கள் தாம் உண்மையிலேயே கால்நடைகள். மனிதர்களைத் தவிர மற்றை எல்லாம் கால்நடைகளல்ல. நல்ல பசும்புல் தரையில் மனிதன் இரண்டு நாளைக்கு நடந்தால் அங்கே ஒரு பாதை விழுந்துவிடும்; அங்கே இருந்த பசும்புல் பட்டுப் போவ

துடன், புதியதாக எந்தச் செடியும் அங்கே முளைக்காது. அத்துணை யளவுக்கு வெம்மை வாய்ந்தவன். ஆனல் மனிதனைத் தவிர வேறு எவைகள் நடந்தாலும் பாதை விழுவதில்லை; பசும்புல்லும் கருகிப்போவது இல்லை. கால்நடை பதிந்து பாதையாக ஆக்காமல், பிறபொருளைக் கெடுக்காமல், வாழவைக்கும் நடைகளை உடைய மிருகங்களைக் கால்நடை என்று கூறுவது மங்கல வழக்கு.

(4) மேலே குறிப்பிட்ட எல்லாவற்றையும்விட வேருெரு விளக்கம் நாம் இங்கே சிந்திக்க வேண்டுவது. நடை என்ற சொல்லுக்கு ஒழுக்கம் என்பது பொருள். உலகநடை என்று சொல்லும் போது பயன்படுத்தப் பெறுவதைப் போல கால் என்ற சொல்லுக்கு வழி என்றும் மரபு என்றும் பொருள் உண்டு. 'கால்முளை' என்ற சொல்லால் பிள்ளைகளைக் குறிப்பிடுவது உண்டு. எனவே மரபு முறைப்படி வந்த ஒழுக்கத்தை உடையவைகள் எல்லாம் கால்நடைகளே. கால்நடைகளின் ஒழுக்கம் மரபு வழியாக வந்தவைகள். அவைகள் அறிவுத்திறன் உடையவைகளாயிருந்தபோதிலும், அவ்வறிவைப் பயன்படுத்தித் தம்முடைய நெறி முறைகளில் எத்தகைய மாற்றங்களையும் செய்து கொள்ளமுடியாதவை. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த சிங்கம், புலி முதலியவைகளுக்கும் இன்றிருப்பவைகளுக்கும் வாழ்க்கை முறையில் எத்தகைய மாற்றங்களையும் அவைகள் செய்து கொண்டன எனத் தோன்றவில்லை. காரணம் அவைகள் '**கால்நடைகள்**'. மரபு வழியில் முறைப்படி வரும் ஒழுக்கங்களையே, சற்றும் மாற்றம் இல்லாமல் இன்றுவரை மேற் கொண்டு வருகின்றன. ஆனல், ஆறறிவு படைத்த மனிதன் தன் வாழ்க்கையோடு இணைந்த அனைத்து மரபுகளையும் சிந்திக்கிருன். பிறநாட்டு மக்கள் வாழ்முறையோடு தன்னுடைய மரபு முறையை ஒத்திட்டுப் பார்க்கிருன். ஏன்? இன்னும் சொல்லப் போனல், மிருகங்களின் வாழ்முறையோடும் தன்னுடைய வாழ்க்கையை ஒத்திட்டுப் பார்க்கிருன். தன்னுடைய அறிவு முறைக்குச் சரியென்று தோன்றியவைகளைப் பின்பற்றுகிருன். உலகநடையை அறிந்து ஒழுகும் முறையை ஒப்புரவு எனக்கூறி, அதனை ஒரு அறமாகவும் கொண்டிருக்கிருன் மனிதன். இதை அடிப்படையாகக் கொண்டே திருவள்ளுவர்.

"சென்றவிடத்தாற் செலவிடாது தீது ஒரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு."

என அறிவின் செயற்பாட்டை எடுத்துக் கூறினர். சென்றவிடம் என்பதை மரபுவழி எனக் கொள்ளுக.

"பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல". என்றும்.

"தொன்மையவாம் எனும் எவையும் நன்று ஆகா இன்று
தோன்றிய நூல் எனும் எவையும் தீதாகா"

என்றும் இலக்கணம் அமைத்துக் கொண்டவன் மனிதன்.

மேற்கூறியவைகளால் தமிழகத்தில் அறிவைப் பற்றிய ஆய்வானது செயல் முறையைக் கொண்டு அமைந்ததாகவும், வாழ்வியல் நோக்கத்தின் முழுமையையும் உள்ளீடாகக் கொண்டு அமைந்ததாகவும் உள்ளதை அறியலாம்.




உ

சிவமயம்

# இன்பச் செல்வம்

சிவம், தொண்டை மண்டலாதீனம், காஞ்சி.

(முன்னதன் தொடர்ச்சி)

'அன்பினுல் அடியேன் ஆவியோ டாக்கை
ஆனந்த மாய்க்கசிந் துருக'
என்பரம் அல்லா இன்னருள் தந்தாய்'

என்றதில், நன்கு ஆராய வேண்டுவது இது, ஆக்கையுருக்கம் ஆவியுருக்கம் இரண்டும் இதிற் கூறப்பட்டன. உருக்கத்தின் முன்னர் ஆனந்த மாய்க் கசிதல் அறிவிக்கப்பட்டது.

"ஆவியோ டாக்கை புரைபுரை கனியப் புகுந்து நின்றுருக்கிப் பொய்யிருள் கடிந்த மெய்ச்சுடரே" என்ற திருவாசகத்திலும் அவ்விரண்டும் சொல்லிய தறிக, 'புரைபுரை கனிய' என்றதும் 'கனியப்புகுந்து நின்று உருக்கி' என்றதும் நினைக்கற்பாலன.

'புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்து என்
என்பெலாம் உருக்கி யெளியையாய்ஆண்ட
ஈசனே மாசிலாமணியே'

இதில் நம் உள்ளம் நிலைத்தல் வேண்டும், யாக்கை உருகிவிட்டால் அது கோயிலாதல் கூடுமோ? என்பெலாம் உருக்கி விடும் நோய் ஒன்றுண்டு. அதுபோலும் உருக்கமோ இதிற் கூறப்பட்டது? யாக்கையுருக்கம் வெண்ணெயுருக்கம் போல்வதாயின்,

'விடல்இல் அடியார் உடல் இலமே மன்னும்
உத்தரகோச மங்கைக்கு அரசே'

'வினையேன் மனத்தே ஊறும் மட்டே (--தேனே),'

'சிந்தையே கோயில் கொண்ட எம்பெருமான்'

'என் மனத்திடைமன்னிய மன்னே' என்றவை பொருந்துமோ?

"தந்தது உன்னை, கொண்டது என்னை" என்றுணர்த்தியதே உண்மை யுருக்கம் ஆகும்.

திருஞானசம்பந்தர் 'உள்ளம் உருகில் உடனுவார்' என அருளினர். அவ்வுருக்கமே நம்மையாளும் முன்னேர் உணர்த்திய உண்மையுருக்கம். அத்தகைய உருக்கமே பேரின்பம் பெறும் உபாயம். உய்ய வந்த தேவநாயனர் அருளிய 'திருவுந்தியார்' எனப் பெயரிய உயரிய அருள் நூலில், அத்திருமுறைத் தொடர் மொழியைக் கொண்டு,

"உள்ளம் உருகில் உடன்ஆவர் அல்லது
தெள்ள அரியர்என் றுந்தீபற
சிற்பரச் செல்வர் என் றுந்தீபற" என்று உபதேசித்தருளினர்.

இதில் உள்ளது உருக்கம். 'யான்' என்னும் செருக்கும் 'எனது' என்னுஞ் செருக்கும் அற்றுத் தற்போதம் இன்றிச் சிவபோதமாயிருந்து தெளியின், சிற்பரவியோமம் (பரஞானவெளி) ஆகிய திருச்சிற்றம்பலத்துள் நின்று பொற்புக் கூத்துக் காட்சியுறுதல் எளிது. "உடந்தையாய்ச்சிவன் தோற்றம் ஒன்றுமே காண்பர்". "கிடந்த கிழவியைக் கிள்ளியெழுப்பி உடந்தையுடனே நின்று உண்மையுணர்ந்தார்' அவரே, பாவியேற்கும் உண்டாமோ பரமாநந்தப் பழங்கடல் சேர்ந்து ஆவி யாக்கை யான் எனது என்று யாதும் இன்றி அறுதலே' என்ற துணர்க.

"என்புள்ளுருக்கி இருவினையை ஈடு அழித்துத் துன்பங்களைந்து துவந்துவங்கள் இன்பம் துன்பம் விருப்பு வெறுப்பு முதலிய இரட்டைகள்) தூய்மை செய்து முன்புள்ளவற்றை முழுதறிய உள்புகுந்த அன்பு" என்பதும் மெய்யானவுருக்கத்தை விளக்கும்.

இக்கருத்திலே 'பாவியேனுடைய வூனினையுருக்கி' என்றதை உணர்தல் வேண்டும். சிலருரை இல்வுண்மையுணர்ந்தெழுதப் பட்டிலது.

உயிர்களும் அறிவுடையவை. திருவருளும் உணர்வேயாயிருப்பது, அத்திருவருளையே தன்னுரு (சொருபம், ஆக உடைய சிவமும் சித்து, சத்து-என்றும் உள்ளது, சித்து-எல்லாவுணர்வுமாயிருப்பது, ஆனந்தம்-பேரின்பம், சச்சிதாநந்தம் என்னும் வடசொற்றொடரைத் தமிழர் 'மெய்யுணர்வின்பம்' என்று வழங்கினர். உயிரறிவும் ஓர் ஒளியே. அந்நிலை பக்குவான்மாக்களுக்கே உண்டு. அம்மணிவிளக்கின், உள்ளொளியே திருவருள், அத்திருவருளைத் தன்னுருவாக் கொண்டது சிவம். அது திருவருளொளிக்குள் விளங்கும் முடிவாய பேரொளி, இவ்வுண்மையை உணர்தல் பேரின்ப வாழ்வைத்தரும். இவ்வுணர்வே மெய்யுணர்வு. சிவஞானம் பரஞானம் எனப்படும். "உரையாட வுள்ளொளியாட" "உரைமாண்டவுள்ளொளியுத்தமன் வந்து உலகம்புகல்" "ஓங்கி உளத்தொளிவளர வுலப்பிலா அன்பு அருளி' (திருவாசகம்) "இடர்கெடுத்து என்னை ஆண்டு கொண்டு என்னுள்ளிருட்பிழம்பு அற எறிந்து எழுந்த சுடர்மணிவிளக்கின் உள்ளொளி விளங்குந் தூய நற்சோதியுட் சோதி" (திருவிசைப்பா.2) இதில, சுடர்மணிவிளக்கு என்றது உவமம். ரத்நதீபம் போல என்பது பொருள். அதைப்போல

உள்ளொளியாக விளங்குவது திருவருளொளி. அதனையே 'தூயநற சோதி' என்ருர். அச்சோதியுட் சோதியே சிவம். "பருவம் சேர் உயிர்க்குத் துங்க அரன் ஞானக்கண் கொடுத்து அருளிஞலே சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன்" என்று (சிவஞானசித்தி) தமிழ்ச்சிவாகமம் கூறிற்று, உள்ளொளி பெருக்கல் ஆவது சிவஞானத்தை உயிர்க்கு நிறைவுறச் செய்தல். அது பெருகிஞலன்றிப் பேரின்பம் இல்லை. உள்ளொளியாகிய திருவருள் ஞானம் பெருகுந்தோறும் ஆநந்தாநுபவம் (ஆன்மலாபம்) உலப்பில்லாமல் எய்தும். உலப்பிலா ஆநந்தம் என்றது நன்கு விளங்கவேண்டின்,

"அறவே பெற்ருர் நின்னன்பர் அந்தம் இன்றி அகம் நெகவும்
புறமே கிடந்து புலைநாயேன் புலம்புகின்றேன் உடையானே
பெறவே வேண்டும் மெய்யன்பு பேரா ஒழியாப் பிரிவில்லா
மறவா நினையா அளவில்லா மாளா இன்பமாகடலே." என்ற

திருவாசகத்தை வாயாரப்பாடி நாவாரவோதிச் சித்தமாரத் திருவடியே நினைந்துள்கித் தலையாரக் கும்பிட்டுக் கையாரத் தொழுது அருவி கண்ணூரச் சொரிந்து சிவாநுபவத்தில் திளைக்கும் பெரும்பயனை இடைவிடாது குறிக்கொண்டு பயிலல் வேண்டும். எத்தனையோ பிறவிகளிற் பழகிய பழக்கம் தவிர இத் திருவருட்பழக்கம் இடைவிடாதிருப்பதே பிறப்பையும் இறப்பையும் கடந்து பேரின்ப வாழ்வுற முடிவாய நெறியாகும். அதனின் வேருக உழப்புவதிற் பயன் ஒன்றும் இல்லை, "உலப்பிலா ஆநந்தக் கண்ணீர்" 'உலப்பிலா ஒன்றே' உலப்பிலா அன்பு' என்பனவும் இங்கு நோக்கத் தக்கன.

தேன் என்று சிவனைக் குறிப்பது பெருவழக்கு. நாம் கொள்ளுந்தேன் வண்டு முதலியவற்றின் எச்சிற்றேன். அதைச் சிவபெருமானுக்கு ஒப்பாக மொழிவது தகாது எனப் பாவலர் கருதினர். திருக்குற்ருலத்தல புராணம் 'ஈஅறியாப் பூந்தேனே' என அழைத்தது. திருநாவுக்கரசு நாயஞர் உரை "கருதுவார்இதயத்துக்கமலத்துஊறுந்தேனவன்காண்". இத்திருவாசகமும் 'உலப்பிலா ஆநந்தம் ஆயதேன்' என்றது. வெறுந்தேஞகச் சொல்லவில்லை.

சொரிதல் பெருமழையின் செயல். அம்மழை நீர்பெருகும் அளவிற் சொரிதலைப் போலத் திருக்கோயில் வழிபாட்டிற் பூச்சொரிதல் உண்டு மலையாளத்து வழக்கும் காண்க. திருநாவுக்கரசு நாயஞர்.

"சொரிவிப்பார் மழை, சூழ்கதிர்த் திங்களை
விரிவிப்பார் வெயிற்பட்ட விளங்கொளி
எரிவிப்பார் தணிப்பார் எப்பொருளையும்
பிரிவிப்பார் அவர் பேரெயிலாளரே," (5.16.3) என்றருளினர்

இதில் மழை, திங்கள், ஞாயிறு மூன்றும் உள்ளவாற்றைச் சிலப்பதிகார மங்கலவாழ்த்து மூன்ரேடும் ஒருங்கு நோக்குக. உலப்பிலா ஆநந்தம் ஆயதேனினைச் சொரிந்து என்றதன் கருத்து. சொரியச் சொரிய உலப்பிலாதது இப் பேரின்பத்தேன் என்பதாம்.

புறம்புறம் திரிதல்:—பால்நினைந்தூட்டுந்தாய் அப் பாலுண்ணும் குழந்தையின் பின் சென்று அதற்கு யாதும் ஊறுண்டாகாதவாறு காப்பாள். அருட்டாய் உலப்பிலா ஆநந்தம் நுகர்விக்கும் போது பிள்ளைகள் ஆய நம் புறத்தே தானும் திரிந்து நம்மைக் காப்பதை ஞானம் பெற்றால் அறியலாம். வாகீசரும், 'நம்பனே நான்முகத்தாய்' எனமுதலும் திருநேரிசையில், என்றும் பின்பினே (4.62.2) திரிந்து, அருள் செயாய் நாயேன் பேர்த்து இனிப் பிறவாவண்ணம் அருள் செயாய். என்றருளிய தறிக. புறம்புறம் திரிதல் பின்பினே திரிதல் இரண்டும் ஒரு பொருளன.

செல்வம்:—செல்லாமை (-வறுமை)க்கு உடம்பாடு. செல்வாய செல்வம், 'நிலையுடைய பெருஞ் செல்வம். நீடுலகிற் பெறலாமே' (சம்பந்தர்). அருட்செல்வம் செல்வத்துட் செல்வம். சிவம்-மங்கலம், தூய்மை, நலம், பேரின்பக் காரணம் (சிவஞான முனிவர்). பெருமான்-பெருமகன் (மஹாதேவன் என்றும் வடமொழிப் பெயர்ப் பொருள்). யான் என்றது உயிரது சிறுமையும் உன்னை என்றது சிவனது பெருமையும் தோற்றும். தொடர்ந்து-இடையறாப் பேரன்புடன் இடைவிடாது நினைத்து. சிக்கெனப் பிடித்தல்—அதுவே தானாயிருந்து, நீங்குந் தீங்கு அகலத்தூங்கும் ஒருமை (அத்துவித) நிலை. எங்கு எழுந்தருளுவது—ஒழிவற நிறைந்து அசைவறநிற்கும் நிலைக்கு வேறாய் ஓரிடமும் இல்லை. பிரிவறப் பிடித்துக் கொண்டுள்ளேன் என்றவாறு (விரிக்கிற்பெருகும்).

உ

# தாய்மதம் திரும்பியவர்களுக்குப் புத்தாடை வழங்கும் விழா

திருச்சிமாவட்டம் விரகாலூரில் தாய்மதம் திரும்பிய 100 இந்து அரிசனங்களுக்குப் புத்தாடை (வேட்டி, சேலை, குழந்தை உடுப்புகள்) வழங்கும் விழா 4-11-72ல் இந்து சமுக நல சேவா சங்கத்தின் சார்பிலும், திரு. வி. நாகராஜ், மற்றும் தமிழ்நாடு தெய்விகப் பேரவையின் திருச்சி மாவட்ட சமயப் பரப்புநர் திரு. இரா. சி. நாகரத்தினம் ஆகியோருடைய முயற்சியாலும், மிகவும் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. 300க்கு மேற்பட்டவர்களுக்கு தீபாவளித் தின்பண்டங்களும், இருவேளை உணவும் இனிப்பும் வழங்கி விருந்தளிக்கப் பெற்றது. கிறித்துவர்களும் இந்த விழாவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டிருக்கிறார்கள்.

திருவாளர்கள், வி. நாகராஜ், கே. சுப்பிரமணியன், எஸ். இராமச்சந்திரன், தேவேந்திர சரவண ராஜ்குமார், ஆகியோர் சமயச் சொற்பொழிவாற்றினார்கள். திருவாளர்கள், மா. முருகானந்தம், ஆ. பிச்சையா, சி. குணசேகரன் ஆகியோர் பக்திப்பாடல்கள் பாடினார்கள்.

விழா இறுதியில் அனைவருக்கும் இனிப்பு வழங்கப் பெற்று, இறைவாழ்த்துப் பாவுடன் விழா இனிது நிறைவேறியது.




## பிச்சைத் தேவர்

[புலவர் திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.,]

முன்னுரை :

கடவுளுக்கு உருவம் இல்லை என்று சில மதங்கள் கூறுவதுண்டு. ஆயினும் நமது இந்துமதம் கடவுளுக்கு உருவம் உண்டு என்னும் கொள்கையுடையது. கடவுள், தாம் குறித்தது ஒன்று ஆக மாட்டாத குறைவை யுடையவரல்லர்; அவர் நெறிப்பட நிறைந்த ஞானமும் தொழிலும் உடையவர்; விருப்பு வெறுப்புக்கள் இல்லாதவர். ஆதலால் அவர் உயிர்கள் மீது கொண்டுள்ள கருணையினால், அவ்வுயிர்களுக்கு நலம்புரிதற் பொருட்டுத் தாம் நினைக்கின்றபடி யெல்லாம், திருவுருவங் களை எடுத்துக் கொள்ள வல்லவராவர். இறைவன் நம்மைப் போல வினைவயத்தினால் உருவங்களை எடுப்பவர் அல்லர். நம்முடைய உருவம் எழுவகைத் தாதுக்களால் இயன்றது; அழிந்துபடும் இயல்புடையது. இறைவனது திருவுருவம் இத்தகைய குறைபாடுகளை யுடையதன்று. அடியவர்களுக்கு அருள் செய்வதன் பொருட்டுத் தாம் நினைத்தபடி யெல்லாம் வடிவங்களை எடுத்துக் கொள்ளும் வல்லமை, இறைவனுக் குரிய இயல்பாகும்.

"குறித்ததொன் றாக மாட்டாக் குறைவிலன் ஆத லானும்
நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமை யானும்,
வெறுப்பொடு விருப்புத் தன்பால் மேவுதல் இலாமை யானும்
நிறுத்திடும் நினைந்த மேனி நின்மலன் அருளி னாலே"

—சித்தியார்.

பிச்சைத் தேவர் :

சிவபெருமான் தன்னை வழிபடும் அன்பர்களுக்கு அருள்புரிதற் பொருட்டு, அவ்வப்போது மேற்கொண்ட அருளுருவத் திருமேனிகள் 25 என்றும், 64 என்றும் நூல்கள் நுவலும். அவற்றுள் பிட்சாடன மூர்த்தம் என்பது ஒன்றாகும். இதனை மணிவாசகர் பிச்சைத் தேவர் என வழங்குவர். "ஆரூர் எம் பிச்சைத் தேவா! என் நான் செய்கேன்? பேசாயே" என்பது திருவாசகம்.

திருவுருவ அமைப்பு :

பிட்சாடன மூர்த்தி, கங்காள மூர்த்தி, பயிரவ மூர்த்தி ஆகிய மூர்த்திகளின் திருவுருவ அமைப்புகள் பெரும்பாலும் ஒத்திருக்கும். கூர்ந்து நோக்கினுல் மட்டுமே வேறுபாடு அறிந்து கொள்ளுதல் இயலும். பிட்சாடன மூர்த்தம் ஆடையின்றி வெற்றரையாக இருக்கும். இடக்கையில் பிச்சைப் பாத்திரமும், வலக்கையில் தமருகம் அல்லது சூலமும் அமைந்திருக்கும். நான்கு திருக்கைகள் உண்டு. இடக்கால் தரையில் ஊன்றியிருக்கும். வலக்கால் நடப்பதற்கு அடையாளமாகச் சற்று வளைந்து தளர்ந்திருக்கும். தலையில் சடாபாரம் (Dishevelled) அல்லது சடாமண்டலம் (Arranged in the form of a circle) இருக்கக் காண லாம். இடுப்பில் பாம்பு ஒன்று சுற்றியிருந்து அணிசெய்யும். "அற்றம் மறைப்பது முன்பணியே" என்பது சம்பந்தர் திருமொழி. அதன்படி, அப்பாம்பே அற்றம் (மறைவிடம்) தோன்ருதபடி, அங்கு அழகுசெய்து கொண்டு விளங்கும். நெற்றியிற் பட்டம் திகழும். திரிநேத்திரம், நீலகண் டம் முதலிய சிறப்பியல்புகள் இதற்கு உண்டு. மார்பிற் பூணூல் ஒளிரும் வலக்காலில் வீரக்கழல் வயங்கும். திருவடிகளை வேதப்பாதுகைகள் தாங்கியிருக்கும். இவர் கபாலம் (பிரமன் தலையோடு) ஏந்தியிருப்பார். அதனுல் இவருக்குக் கபாலி என்றும் ஒரு பெயர் வழங்கும். கபாலம் ஆகிய பிச்சைப்பாத்திரம் ஏந்திய கை, உந்தி (கொப்பூழ்) வரையில் உயர்ந்திருக்கும். தமருகம் (உடுக்கை) தாங்கிய வலக்கை, காது வரை யில் நீண்டு ஓங்கிச் சென்று நிற்கும். இந்நிலையில் காதுக்கும், வலக்கை யின் முன்னங்கைக்கும் 16 அங்குலம் தொலைவு இடைவெளி இருத்தல் வேண்டும் எனச் சிற்ப நூல்கள் கூறும். கபாலம் ஏந்திய இடக்கை, கடக முத்திரை நிலையில் விளங்கும். வலப்பக்கம் ஒருமானும், இடப்பக்கம் ஒரு குறட் பூதமும், பிச்சைத் தேவரின் சிற்பங்களில் அமைந்திருக்கக் காணலாம்.

தத்துவ நுண்பொருள்கள் :

(1) எல்லாம் வல்ல இறைவன் ஆகிய சிவபெருமான், பிச்சைக் கலன் ஏந்திப் பிச்சையேற்கும் பிச்சைத் தேவர் என்னும் நிலையில் விளங்குவது பற்றி, ஒரு சிலர் ஏதேனும் ஏளனமாகக் கருதலாம். ஆனுல் அங்ஙனம் இன்றி, அருமை பெருமைகள் மிக்க இறைவன், தன்னுடைய எளிமைத் தன்மை இனிது விளங்கும் படியாகத் திகழும் நிலையே, பிச்சைத் தேவரின் திருவருட்கோலமாகும் என்பது, அறிந்து கொள்ளுதற்குரியது. இறைவனை "அருமையில் எளிய அழகே போற்றி" என்ருர் மணிவாசகனுர். அம்முறையில் பிச்சைத்தேவர் அருமை எளிமை-அழகு என்னும் மூன்றும் ஒருங்கே அமைந்து திகழ்கின்ருர் எனலாம்.

(2) பிச்சைத் தேவர் நம்மிடம் பொன்னும் பொருளும் கேட்கின்றி லர்; நம்முடைய அன்பையும் நன்றியுணர்வையுமே அவர் பெற விரும்பு கின்ருர்.

"வெள்ளை நிற மல்லிகையோ ? வேறெந்த மாமலரோ?
வள்ளற் பிரானுர்க்கு வாய்த்த மலர்எதுவோ?
வெள்ளை நிற மல்லியல்ல, வேறெந்த மலரும் அல்ல,
உள்ளக் கமலம்அடி உத்தமனுர் வேண்டுவது"

எனச் சுவாமி விபுலானந்தர் அவர்கள் பாடியது போல நம்முடைய உள்ளம் ஒன்றனையே இறைவன் தாம் பெற விரும்புகின்ருர்.

(3) "தந்தது உன் தன்னைக் கொண்டது என் தன்னை" என மணிமொழியார் பாடுவதுபோல, நம்முடைய குற்றங் குறைகளையெல்லாம் தாம் ஏற்றுக் கொண்டு, தம்முடைய குணங்களையெல்லாம் இறைவன் நமக்குத்தந்தருள விரும்பும் நிலையே, பிச்சைத் தேவரின் திருவுருவச் சிறப்பாகும்.

(4) இரவலர்களின் நிலையில், இழிவாக கருதுவதற்கு ஏதும் இல்லை. உண்மையிற் கூர்ந்து நோக்கினுல், ஒருவகையில் இரவலர் போன்ற புரவலர், எவரும் இலர் எனலாம். இரப்பவர் இருப்பதனுல் தான், கொடுக்க முடிகின்றது; 'ஈத்துவக்கும் இன்பம்' எய்த, இயல்கின்றது. இரவலர்க்குக் கொடையளிப்பதனுல்தான், நாம் இம்மையிற் புகழும், மறுமையில் வீடுபேறும் அடைகின்ரேம். அழிந்து போகும் பொருள் சிறிதளவைப் பெற்றுக் கொண்டு, அழியாத புகழையும் அரும் பெறல் வீடுபேற்றையும் நமக்குக் கொடுக்கின்ற இரவலர்கள்தான், உள்ளபடி நோக்கினுல், வள்ளல்களாக விளங்குகின்ருர்கள். இவ்வுண்மையினை,

"பரப்புநீர் வையகத்துப் பல்லுயிர்கட் கெல்லாம்
இரப்பாரின் வள்ளல்கள் இல்லை;—இரப்பவரே
இம்மைப் புகழும் இனிச்செல் கதிப்பயனும்
நம்மைத் தலைப்படுத்த லால்"

—அறநெறிச்சாரம்

என முனைப்பாடியார் என்னும் புலவர் அழகுறப் பாடியருள்கின்ருர். "இரத்தலும் ஈதலே போலும்" எனத் திருவள்ளுவர் பெருந்தகையும் கூறியிருத்தல் காணலாம். கொடுத்தலும் பெறுதலும், வெறும் பொருட் செல்வத்தினை மட்டுமே குறித்து நிகழ்வன அல்ல; அதற்கும் மேற்பட்ட அறிவு அருள் முதலியவற்றையும் உள்ளடக்கியனவாகும் என்பது, நாம் ஈண்டுக் கருத்தில் இருத்துதற்குரியது.

திருமூலர் :

(5) இக்கருத்தினையே, ஆசிரியர் திருமூலர் பெருமானும் தமது திருமந்திர நூற்பாடல் ஒன்றிற் குறிப்பிடுகின்ருர். "எல்லா உலகும் படைத்த இறைவனை ஒருசிலர் இரந்துணி (பிச்சைக்காரன்) என்று கூறி இகழ்கின்றனர். இறைவன் எதற்காக இரக்கப் போகின்ருன்? தான் இரப்புத் தொழிலை மேற் கொள்வதன் மூலம், அவனுக்கு நாம் ஈயப் பெறும் வாய்ப்பை நமக்கு அவன் உண்டாக்கிக் கொடுத்து, அதன்

வாயிலாக, நாம் அவனுடைய எட்டாத திருவடிகளை எட்டிப் பிடித்துக் கொள்ளும்படி இன்னருள் புரிகின்றான் இறைவன்" என்கின்றார் திருமூலர்.

"பரந்துலகு ஏழும் படைத்த பிரானை
இரந்துஉணி என்பர்கள்; எற்றுக்கு இரக்கும்?
நிரந்தர மாக நினையும் அடியார்
இரந்துண்டு தன்கழல் எட்டச்செய் தானே"

—திருமந்திரம்.

பெருவள்ளல் :

(6) ஒரு சிறந்த ஆசிரியன், அறிவற்ற மற்றையோர்க்கு அறிவுடைய தான் கற்றுத் தருவதாகப் புலப்படுத்தாமல், தானே மற்றையர் பால் இருந்து கற்றுக் கொள்வது போலக் காட்டிக் கொண்டு, நயம் படக் கற்பிப்பான். அதுவே ஒரு நல்லாசிரியனின் சிறப்பிலக்கணம் என்பர். அங்ஙனமே, ஒரு சிறந்த வள்ளல் எனப்படுவானும், வறியவர்களுக்குத் தான் வாரி வழங்குவது புலனாகா வண்ணம் அடக்கமாக விளங்கி, அவர்களிடமிருந்து தானே ஏதோ பலவற்றைப் பெற்றுக் கொள்வது போல அன்பு பாராட்டியும், இன்சொற்கள் இயம்பியும், அவ்வாற்றால் அரிய பல உதவிகள் புரிவான். இஃது ஒரு தலைசிறந்த வள்ளலின் உண்மைத் தன்மையாகும்.

இத்தகையதொரு சிறந்த பெருநிலையிலேயே, நமக்கெல்லாம் எல்லா வகை நலங்களையும் ஒருசேர அளித்தருளும் பெருவள்ளல் (தியாகராசன்) எனத் திகழும் சிவபெருமான், தானே நம்மிடம் இருந்து ஏதோ ஒன்றைப் பெறவிரும்பும் இரவலன் போல, இனியதொரு நாடகம் நடித்து, அவ்வழியாகவேனும் நம்மையெல்லாம் ஆட்கொண்டருள வேண்டும் என விரும்பி எளிவந்து எழுந்தருளுகின்றான். இப்பேரருள் நிலையை விளக்குவதே பிச்சைத்தேவர் திருவுருவம் ஆகும்!

முடிவுரை :

சிவபெருமான், தான் ஓர் ஒப்புயர்வற்ற மிகப்பெரிய செல்வனும், தலைவனும், வள்ளலுமாக இருந்த போதிலும், ஒருவகையில் மிகப் பெரிய பிச்சைக்காரனாக இருத்தலையே விரும்புகின்றான். அவன் நம்மிடம் அன்புப்பிச்சை பெறுதலை விழைகின்றான். நம்முடைய உள்ளக் கதவுகள் திறக்குமா? என்று ஏக்கற்று நிற்கின்றான். நமது இருதயத்தின் தலைவாயிலில் நின்று காத்துக்கொண்டிருக்கின்றான். நமது இருதயமாகிய குகையினைத் தூய்மை செய்து, அதன்கண் தனது அருளொளியைப் பரப்பி நலம் செய்யத் துடிக்கின்றான். நம்முடைய துன்பப் பொதிகளையும், வினைச்சுமைகளையும் தன்னிடம் தந்துவிட்டுக் கவலையற்று நலமே இருக்கும் வண்ணம், நம்மை நாடிவந்து, நம்மிடம் அவன் இரந்து எளி நிற்கின்றான். நாம் அவனைப் பொருட்படுத்தாமல் புறக்கணித்தாலும்,

நம்மை அவன் பொருட்படுத்தி, நம்மைப் புறக்கணிக்காமலும் கைவிடாமலும் காப்பாற்றி அருள்புரிகின்ருன். நமக்கு நலஞ் செய்யும் அவனது முயற்சியில், தன்னேடு இயைந்து ஒத்துழைக்குமாறு நம்மை அவன் நயந்தினிது வேண்டிக் கொள்கின்ருன் *. "ஏற்பது இகழ்ச்சி" என்பது உலகியலில் உண்மையாகலாமாயினும், தன்னலமற்ற தூய நல்ல சான்ருண்மைப் பெருநிலையில், அதுவே மிகப் பெரிய சிறப்புடையதாகத் திகழ்தலேயே, பிச்சைத்தேவர் என்னும் சிவபிரான் திருவுருவம், தெள்ளிதின் விளக்குகின்றது.

* "Hindu mythology looks upon god as an eternal beggar waiting for the opening of the door that he may enter into the darkness and llumine the whole horizon of our being as with a lightning flash. It is not so much man seeking God as God seeking man. He goes out into the dangers of the wilderness to lead us out of it. God so loves the world that he gives himself to it. He expects us to recognise and respond to his call and co-operate with him. He wants us to look upon him as our friend, lover and comrade. He is for ever saving the world"

—Dr. S. Radhakrishnan.

## மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திருவெம்பாவை

**சிவம், தொண்டைமண்டலாதீனம், காஞ்சி.**

'எம்பாவை' என்பது இங்கு மாணிக்கவாசகப் பெருமானர் அருளிய திருவாசகத்துள் ஒரு பகுப்பைக் குறித்து வழங்குவது. திருவாசகத்துள்ளே நீத்தல் விண்ணப்பம், அன்னைப் பத்து முதலிய பத்துக்கள், பண்டாய நான்மறை, ஆனந்தமாலை, அச்சோப்பதிகம் எண்ணப்பதிகம் முதலியவை அல்லாத எல்லாம் 'திரு' என்னும் அடையொடு வழங்குவன. கீர்த்தித் திருவகவல், போற்றித் திருவகவல், கோயில் மூத்த திருப்பதிகம், கோயிற்றிருப்பதிகம் என்றவற்றுள் இடையில் அவ்வடை நின்றது. கோயிற்றிருப்பதிகம் என ஒன்றுள்ளதால், அதனின் வேறுபடுத்துக் காட்ட மூத்த என்னும் பெயரெச்சம் அடையாயிற்று.

திருமுறைகளுள் உள்ள திருப்பதிகங்கள் எல்லாவற்றினும் முற்பட்டமையால் அம்மையார் அருளியதை மூத்த திருப்பதிகம் என்ற வழக்கும் இங்கு நினைவிற்கொள்ளல்தகும், 'காரைக்காற்பேய் செந்தமிழ் பத்தும் வல்லார்' 'காரைக்காற்பேய் தன் பாடல் பத்தும்' என்றருளிய முறையே திருஞானசம்பந்த மூர்த்தி நாயனர் சுந்தரமூர்த்தி நாயனர் திருமுறைகளில் உள்ளது. அப்பர் அடிகளும் மணிவாசகப்பிரானும் அருளிய திருமுறைகளில் அம் முறை இல்லை. இக்கூறியவற்றால் 'மூத்த' என்ற அடைமொழிக்கு ஏதுவும், இடைப்பிறவரலாக, முடிவில், அருளியவர் திருப்பெயர் அமையும். இருவர் அருளிச் செயலில் அஃது இன்மையும் உணரக்கூடும்; ஈண்டு மற்றொன்றும் நினைத்தற்குரியது, அம்மையார் அருளிய இருதிருப்பதிகத்துள் முதலாவது 'கொங்கைதிரங்கி' என்ற தொடக்கத்தையுடையது. இரண்டாவது 'எட்டியிலவம்' என்ற முதலைப் பெற்றது. அவ்விரண்டனுள் மூத்தது முன்னது என்னுங் கருத்தும் தோன்றக் காணலாம். எல்லாத் திருமுறைகளுக்கும் மூத்தது என்ற கருத்தே பலரும் கொண்டிருப்ப தாகும். ஆயினும் சேக்கிழார் பெருமானர், அம்மையார் புராணத்திலே, "மூத்த நற்பதிகம்" என முதல் தோன்றியதையும் "திருப்பதிகம்" என அடுத்து எழுந்ததையும் உணர்த்தியருளியவாறுணர்க.

'எம்பாவை' மிக்க பழங்காலத்திலும் இருந்தது, அதனைத் 'திருவெம்பாவை' என்றார் அல்லர். திருவாசகத்துள் இருக்கும் இதுவே திருவெம்பாவை எனப் போற்றும் பெருமைக் குரியது. இக்காலத்தில் தோன்றியனவும் திருவெம்பாவை என்ற பெயர் கொண்டிருத்தல் அருணெறியொழுகுவார்க்கு வருத்தம் ஆக்கும். கற்பழித்த கொடுமையிலே முதிர்ந்தவர்க்கு ஒருவர் பாடிய எம்பாவைகளும் அவ்வடையுற்று வெளிவந்துள்ளன. சைவத் திருமுறைகளை மயங்கி யுணரும் வகையில், ஏனைய இருவேறு முறையும் தோன்றியுள்ளன; (முறை—நான்முறை), திருத்தொண்டர் புராணத்தையும் மதியாது, புதுப்புராணம் தோற்றினர். அதில் இருளும் மருளும் நீங்கி அருளும் பொருளும் அறியுந் தெருளில்

லார்க்கும் புராணம் உண்டு. 'சைவம்' என்னும் பழைய (திங்கள்) வெளியீட்டில், 'சைவப்பகைவர் சைவர்களே' என்ெருரு கட்டுரை உண்டு. அதனை நிறுவிய செயலே இப்புதுப்புராணப்படைப்பு. எம்பாவைக்கும் இவ்வகைப் புதுப்படைப்பு உண்டாயிற்று.

'எம்பாவை' என்னுந்தொடர், தொன்று இருந்தவாறு தோன்றுவது அன்று. இன்று எம்பாவையாகித் தோன்றுகின்றது. பண்டு அத்தொடர் இருந்தவாற்றை அறிவது நன்று. 'பாவை' என்பது தமிழகத்துத் தொல்லாடல் பலவற்றுள் ஒன்று. சிலப்பதிகாரத் துரை (பக்கம் 90. காதை. 3. அடி. 14-15.) மேற்கோளாய ஒரு குறள் வெண்பா

"பாவை திருமகள் ஆடிற்று + அதற்கு உறுப்பு +
ஓவாமல் ஒன்றுடனே ஒன்று." என்றுளது.

இத்திருமகளாடிய பாவையாடல், வெவ்விய போர் செய்தற்குச் சமைந்த போர்க் கோலத்தொடு அவுணர் மோகித்து வீழும்படி கொல்லிப் பாவை வடிவாய்ச் செய்யோள் ஆகிய திருமகள் ஆடிய பாவை என்னும் ஆடலுக்கு உறுப்பு இரண்டு என்பது இதன் பொருளாகும். இதனைக் கடலாடு காதையுள் (60-61)

"செருவெங் கோலம் அவுணர் நீங்கத்
திருமகள் செய்யோள் ஆடிய பாவை"

என்றதால் அறியலாம்.

இந்தப் பாவையாடல் காலப்போக்கில் வழக்கு வேறுபாடுற்று, இத்திருவெம்பாவையிற் கூறப்படும் ஆடலுக்கும் இயைவதாயிற்று. இதனை இசைவார் அரியர். அவர், திருவாசகத்தில் உள்ள பிறபல கூத்துக்குரிய திருப்பதிகங்களை ஆய்வாராயின் இதனை மறுக்க முனையார்.

சிலப்பதிகாரவுரை மேற்கோளுள் ஒன்று (வரிக்கூத்துக்களைத் தொகுத்துக் கூறும் பஃறொடை வெண்பா) ஆக, அரங்கேற்றுகாதை (13)யில் உள்ள பலவகைக் கூத்து விளக்கத்தை யொட்டிக் காட்டப் பட்டுளது. அதிலே உள்ள அம்ம(ா)னை, (கோத்) தும்பி (வண்டரசு) சாழல், தோள்வீச்சு (தோணோக்கம்) உந்தி, (பொற்சுண்ணம் இடித்தல்) அவலிடி முதலியவை திருவாசகத்தில் தனித்தனித் திருப்பதிகத்திற் கொண்டு பாடப்பட்ட வரிக்கூத்துக் குலத்தன.

இளங்கோவடிகள் "ஆடல் என்றனைத்தும் ஒருங்குடன் தழீஇ உடம்படக் கிடந்த வரியும் குரவையும் சேதமும் என்ற இவை" எனச் சிலம்பின் முடிவிற் குறித்தருளினர். அவற்றுள், இவை வரிக் கூத்துட் படும். திருவாசகத்துட்காணும் இவை போலப் பாவையாடலும் கருதற் பாலது.

பரிபாடலின் (11. 74-91) தைந்நீராடுதல் கூறப்பட்டது. இதுகுறித்து, மு. ரா. கட்டுரையெழுதினர். அதைப் பலர் அறிந்திருப்பர். அதுவே தைத்திங்களின் முற்பட்ட மார்கழி நீராடல் ஆயிற்று. பரிபாடலில் அம்பா ஆடல்' (81) என்றதும் இதுவும் ஒன்றே. மேற்கூறிய பாவையாடல்

என்றதே இதற்கு அடிப்படை, இல்லையேல், பாவை, திருப்பாவை, அம்பா, அம்பா ஆடல், என்ற பெயர் அமையா. இத்திருவாசகத் திருவெம்பாவையில், 'மார்கழி நீராடல்' என்றதும் பரிபாடலில் தைந் நீராடுதல் என்றதும் வேருகா. 'தைந்நீர்' என்பதில் 'தை' என்றது பன்னிரண்டனுள் ஒன்ருய திங்களைக் குறிப்பதன்று. நீரினது குளிரியல்பையுணர்த்துவதேயாகும். தைத் திங்கள் என்பது பத்தாவது மாதத்தைக் குறித்த பெயராக் கொண்டது தமிழ்ச் சொல். அதை வட சொல்லாக அம்மொழியாளர் எழுதினர். மதுரைத் தமிழ்ச் சங்கப் பேரகாரதியிற் காண்க. தைப்பூசம் என்றது அவ் வட சொல் அடிப்படையில் அமைந்ததாகக் கூறினர். தமிழிலே தொன்று தொட்டுள்ள 'தை' என்னுஞ் சொல் நீர்க்கு அடையாய் நின்றதுணர்க.

"பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கள் தண்ணிய தரினும்
வெய்யவுவர்க்கும்"

என்ற குறுந்தொகை (196)ப் பாட்டிலே தண்மையைக் குறித்தே நின்றது அச்சொல். அதனல், தமிழர்க்கு அத்திங்கள் வெய்ய நிலைக்கு மாருய தண்ணிய நிலையைத் தரும் இயல்பு வாய்ந்தது. தெண்ணீர்த் தண்மை காலத்தின் மேல் நின்றது. இதனை ஐங்குறுநூற்றுள் (84)" மகளிர் ஆடும் தைஇத் தண்கயம் போலப் பலர் படித்துண்ணும் நின்பரத்தை மார்பே." என்றதாலும் அறியலாம். 'தைஇய மகளிர்' (கலித். 27) 'தையினீர் ஆடிய தவம் தலைப்படுவாளோ (ஷி. 59) 'தைஇ நின்ற தண் பெயற் கடைநாள்' (அகம். 24) முதலிய நாலரை அடியையும் இங்கு நோக்கல் தகும். மாதத்தைக் குறித்ததெனல் பொருந்துமோ? பதிற்றுப்பத்திலே முத்தம் தைஇய முடிச் சேரல் என்றதற்கு, முத்துமாலை குளிர்ச்சியைச் செய்யும் முடியையுடைய சேரல் என்றது பொருள். இவற்ருல், 'தை' என்ற மாதப் பெயர் வட சொல்லாகாது. தைந்நீராடல் என்றதிலும் மாதப்பெயர் அன்று. அக்காலத்தியல்பு ஆகுபெயராய்க் காலத்தைக் குறித்ததாகக் கொள்ளுமிடம் இல்லை எனல் கருத்தன்று, மார்கழி நீர் என்றது மாதப்பெயரோடு கூடியது. தைந்நீர் என்றது அன்னதன்று. இரண்டும் ஒன்றேயாதலின் நீராடல் மார்கழி மாதத்தைக் குறித்ததே என்பது நம் கருத்து. பன்னிருமாதத்துடன் மார்கழி நீராடலே சிறப்பாயுள்ளது. காரணம் பலவுள. ஐப்பசி முதலே தொடங்கி விடியலில் நீராடிவருதல் பல துன்பங்களைத் தடுத்து நலங்களைப் பயப்பதாகும். பனியால் வருந்தல் நேராது. மார்கழியில் பெரிதும் தாக்கும் நிலையின் நீங்கி உய்யலாம். இது நம் முன்னேர்க்கு மெய்யநுபவம், 'தையல்' என்னும் பெயரது காரணம் உணராதார் பிழைபடக் கூறினர். அகராதிப் பொருள் எல்லாம் உண்மைப் பொருளாமோ?

பாவை நோன்பு என்பது திருவாசகத்தில் யாண்டும் நுழைய மாட்டாது. அது சிவநோன்பொன்றற்கே இடம் ஆய திருவருட்பெரும் பனுவல். திருப்பாவையில் அஃது இருக்கலாம்.

"கடையம் அயிராணி மரக்கால் விந்தை கந்தன்
குடைதுடிமால் அல்லியம்மல் கும்பம்—சுடர்விழியால்
பட்டமதன்பேடு திருப்பாவை அரன் பாண்டரங்கம்
கொட்டி இவை காண்பதினோர் கூத்து"

(சிலப்பதிகாரவுரை மேற்கோள்) என்பதில் உள்ள 'திருப்பாவை' என்னும் பெயரையே கொண்டிருத்தலால், ஆண்டாளம்மையார் அருளிய திருப்பாவையின் பெயர்க் காரணமும் தொன் மரபும் புலப்படும்.

'எம்பாவை' என்ற மரூஉப் பெயரின் தொன்மை எல்லோரும் ஆடுவோம் பாவை என்பதேயாகும் எ(ல்லோரும் ஆடுவோ)ம் பாவை. இதுமரூஉ. ஒவ்வொரு பாட்டிலும் 'ஏலோர் எம்' என்றுள்ளதும் 'பாவாய்' என்பதும் மரூஉவே. தமிழிற் பல சொற்கள் ஐயீருக இருந்து ஆயீருக மாறுதல் எல்லாப் புலவர்க்கும் தெரியும்.

'இ ஈ ஆகும் ஐஆய்ஆகும்' (605)
'முன்னிலைக் கிளவி
இ ஐ ஆய் எனவருஉம் மூன்றும்
ஒப்பத்தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும்' (707)

என ஆசிரியர் தொல்காப்பியனாரும்

'ஐ ஆய் இகர ஈற்ற மூன்றும்
ஏவலின் வருஉம் எல்லா ஈற்றவும்
முப்பா லொருமை முன்னிலை மொழியே' எனப்பவணந்தி முனிவரும்

ஐ ஆய் என அடுத்துக் கூறியதை ஆராய்தல் வேண்டும். நாரை-நாராய், பூவை-பூவாய், தோகை-தோகாய், மூங்கை-மூங்காய், கோதை-கோதாய், எனப் பெயர்ச் சொல்லிலும். வந்தனை-வந்தாய், உண்டனை-உண்டாய், நடந்தனை-நடந்தாய், ஓங்கினை-ஓங்கினுய் என வினைச் சொல்லிலும் ஏன் ஐ ஆய் ஆயிற்று ?

ஐகாரம் ஆயாதல் நாவிற்கெளியது. மேற்காட்டியவை விளியும் வினையும் ஆகும். எம்பாவாய் என்பதில் விளியாயும் இல்லை, வினையாயும் இல்லை. பாவை என்னும் ஐயீற்றுப் பெயர்ச் சொல்லே ஆயீற்றுச் சொல்லாயிற்று. அதை விளியாக் கொள்வோர் விளியாதிருத்தல் மானக் கேடாக்கும். திருவாசகத்திலே சிவனைப் பாடுதலன்றிப் பிறிது யாதும் இல்லை. திருவெம்பாவையிலே மார்கழி நீராடும் மகளிர் எல்லாரும் ஆடுவோம்பாவை என்றனரே அன்றிப் பாவை நோன்பை யுட் கொண்டு பாவாய் என்று அப்பாவையை விளித்தாரல்லர்.

'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதியைப்' பாடத் தொடங்கி, அப்பெரும் பொருளையே சிவனே சிவனே என்று ஓலமிட்டு, உன்னைப்பிரானுகப் பெற்ற உன் சீரடியோம் உன்னடியார் தாள் பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம். அன்னவரே எம்கணவர் ஆவார் அவர் உகந்து சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம் இன்னவகையே எமக்கு எங்கோன் நல்குதி' என்று வேண்டியது பாவையை விளித்தோ?

ஐயா! வழியடியோம் வாழ்ந்தோம்காண் ஆரழல்போல்
செய்யா! வெண்ணீருடீ! செல்வா!..........மடந்தைமண
வாளா! எங்கள் பெருமான் உனக்கு ஒன்று உரைப்போம்,
எம் கொங்கை நின் அன்பர் அல்லார்தோள் சேரற்க,
எம் கை உனக்கு அல்லாது எப்பணியும் செய்யற்க.
கங்குல் பகல் எம் கண் மற்றும் ஒன்று காணற்க.
இங்கு இப்பரிசே எமக்கு எம்கோன் நல்குதி என்று பாவையை விளித்துக் கேட்டதாகக் கொள்ளும் பெரும்புலவர் பாவை விளி என்று எழுதினர்.

இத்திருவாசகத்தில் எல்லாத் திருப்பதிகங்களும் மாணிக்கவாசகப் பெருமான் சிவபிரானையே போற்றுவனவாயுள்ளன. திருவெம்பாவை மட்டும் நோன்பு குறித்து மகளிர் போற்றினர் எனலாமோ? அம்மானை திருப்பொற் சுண்ணம், திருச்சாழல், திருக்கோத்தும்பி, திருப்பூவல்லி முதலியவை போலத் திருவெம்பாவையும் மகளிர் பாடுதலாகப் பாடியரு ளினர். அம்மகளிர் பிறர் மகளிர் வீட்டிற் சென்று எழுப்பிக் கூட்டிக் கொண்டு பொய்கையை உற்று நீராடிய வண்ணம் பாடியிருக்கின்றது வெளிப்படை. இது மார்கழி நீராட்டம் என்று இதன் முடிவில் அறி விக்கப்பட்டுமுளது. இவ்வாறிருக்க முன்னோருட் பலரும் பின்னோருட் சிலரும் 'சத்தியை வியந்தது' (திருவெம்பாவை 16) என்னும் தலைப்பின் பொருளுண்மையை உணர மாட்டாதவராய் விளக்கம் எழுதினர், பேசினர், அந்தப் பேச்சு இன்றும் உண்டு.

அகத்தியர் திருவாசகத்தின் பொருளைச் சிறுசிறு சூத்திரவாக்கியங் களாக அருளினர் என்று ஓரகவல் உண்டு. அதனைக் கழகப் பதிப்பின் மட்டும் நாம் கண்டோம், உண்மையில் திருவாசகத்தின் தலைப்புக் களுக்கு உயரிய கருத்துணர்த்தும் சூத்திரமாகவே விளங்குகின்றன. திருவான்மியூரில் தமிழ்த்தெய்வத்தின் பெயரால் விளங்கும் நூலகத்து வெளியீடாய திருவாசகத்திலும் அவ்வுரை யெழுதிய சிவாநுபவச் செல்வர் தாண்டவராய சுவாமிகள், அகத்தியர் அருளிய சூத்திரங்களின் பொருளை விளக்கி அவற்றை ஒட்டி உரைத்தார்கள். அவ்வுரையின் முதலில் உள்ளவை பெரிய தொரு சைவசித்தாந்த சாத்திரம் ஆகும். அவர்களால் உண்டாகும் ஞானம். அவ்வுரையாற் பெறலாம் அனைவரும்.

மனோன்மனி முதலிய சத்திகள் 19 ஆவது திருவெம்பாவைப் பாடற் கண் உள்ளவாறு உரைத்து நல்க வேண்டுதல் பொருந்துமோ? இவ்வினாவிற்குத் தக்கவிடை தோன்றும் வரை யாம் அக்கருத்தை இசைந் தேற்கத் துணியேம்.

ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ்சோதி (1) ஆதியும் அந்த மும் ஆகித் தோற்றம், போகம் (பரிபாலனம், (காப்பு), ஈறு, (சங்காரம்), மறைப்பு (காறுமை), அருளல் (அநுக்கிரகம்) என்ற ஐந்தொழிலும் புரி யும் உண்மையை உணர்த்தி (20) முடியும் இத்திருவெம்பாவையை நாளும் ஓதிவரல் நன்று. மார்கழித் திங்களிலாதல் ஓதித் திருவருட் செல்வம் வளரப் பெறுதல் உயிர்க்கு உடம்புவாய்த்ததற்கு உறுதியாகும். உய்வினை நாடாதிருப்பது ஊனம் அன்றோ? 'உய்யுமாறு ஒன்று அருளிச் செய்யீர் ஓணகாந்தன் தளியுளீரே' என்று வேண்டியருளினர் திருமணக் கோலப் பெருமாள். 'ஏழைபங்காளனையே பாடு' என்ற திருவருட்கட்டளையை எவரும் மீறலாகாது.

# திரு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் திருத்தணிகை.

## செங்கை மாவட்டம்.

—:o:—

திருமுருகன் உறையுஞ்சிறப்புத்தலங்கள் ஆறு படைவீடுகளாகும். அவ் வாறு படைவீடுகளில், ஐந்தாவது படைவீடாகும் திருத்தணிகை. இத்தலம் நக்கீரர், அருட்பிரகாச இராமலிங்க அடிகளார், வாக்கில் சிறந்த அருணகிரிநாதர், முத்துசாமி தீட்சிதர் போன்ற பெருமக்களால் பாடல் பெற்றதாகும்.

இத்தகு சிறப்பு வாய்ந்த இத்தணிகை, செங்கை மாவட்டத்தில் சென்னை-பம்பாய் இருப்புப் பாதையில், அரக்கோணம் சந்திப்பிலிருந்து வடக்கே 14 கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளதாகும். சென்னையிலிருந்து 84 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது.

இத்தலத்தில் நடைபெறுகிற ஆடிக்கிருத்திகைப் பெருவிழாவில் லட்சோபலட்சம் மலர்க்காவடிகள் செலுத்துவதும், பல்லாயிரக் கணக்கான பக்தர்கள் தலைமுடிக் காணிக்கை செலுத்துவதும், ஆயிரமாயிரம் பிரார்த்தனை முடிப்புகள் செலுத்துவதும், ஒவ்வொரு ஆண்டும் டிசம்பர் 31-ம் நாள், ஜனவரி 1-ம் நாள் ஆகிய இரு தினங்களில் திருப்படித் திருவிழாவில் திருப்படிகள் தோறும் திருப்புகழ் பாடிச்செல்வதும் கண்கொள்ளாக் காட்சியாகும்.

நாள்தோறும் இத்தலத்தை நாடி ஆயிரமாயிரம் பக்தர்கள் வருகின்றனர். வருகின்ற பக்தர்களுக்கு குடியிருப்பு இல்லங்கள், குடியிருப்பு அறைகள், உணவு விடுதி, மலைக்கு வாகனங்கள் செல்வதற்கு மலைப்பாதை ஆகியவைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

பக்தர்கள் பெருமளவில் வந்து திருமுருகன் அருள் பெற்றுய்ய வேண்டுகிறோம். பக்தர்கள் மலைக்குச் செல்ல வாகன வசதி செய்யப்பட்டிருக்கிறது

திரு. சி. சிதம்பரம், பி.ஏ.,
நிர்வாக அதிகாரி

அறங்காவலர்குழு

திரு. மி. ச. நடேசன், தலைவர்.
,, ஜி. எஸ். துரைசாமி முதலியார், அறங்காவலர்
,, கே. கன்னையா நாயுடு ,,
,, கே. திருவேங்கடம் ,,
,, வி. எம். துரைசாமி ரெட்டி ,,

தொலைபேசி எண்கள் :

| | |
|---|---|
| திருக்கோயில் அலுவலகம், | 25 |
| திருக்கோயில் (மலை) | 43 |
| நிர்வாக அதிகாரி குடியிருப்பு | 47 |
| யாத்ரீகர் குடியிருப்பு இல்லம் | 87 |
| மலைப்பாதை | 96 |

தனித்தனி முக்கனி பிழிந்து வடித்தொன்றாக் கூட்டி
சர்க்கரையும் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே
தனித்த நறுந்தேன் பெய்து பசும்பாலும் தெங்கின்
தனிப்பாலும் சேர்த்தொரு தீம்பருப்பிடியும் விரவி
இனித்தநறும் நெய்யளைந்தே இளஞ்சூட்டின் இறக்கி
எடுத்த சுவைக் கட்டியினும் இனித்திடு தெள்ளமுதே!
அனித்த மறத் திருப்பொதுவில் விளங்குநடத்தரசே!
அடிமலர்க்கென் சொல்லணியாம் அலங்கலணிந்தருளே.

—திருவருட்பா.



Edited, Printed at Peravai Achakam and Published by A. Narayanaswamy B. A., for the Tamil Nadu Deivika Peravai at No. 9, Maharaja Surya Rao Road, Alwarpet, Madras-18.